# கல்கி சிறுகதைச் சிறப்பிதழ்

பரிதாபி, மார்கழி 17 ■ டிசம்பர் 31, 1972




## பொருளடக்கம்






| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 27-00 | ரூ. 13-50 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



முடிவிலாக் கீர்த்தி பெற்றாய்
புவிக்குளே முதன்மை உற்றாய்

# பெண்களுக்குப் புதியதோர் வாய்ப்பு

புதியதொரு சேமிப்புத் திட்டத்தை பிரதம மந்திரி ஸ்ரீமதி இந்திரா காந்தி ஏப்ரல் முதல் தேதி துவக்கி வைத்தார். மாதர் தலைமையிலான வட்டார சேமிப்புத் திட்டம் என்னும் இத்திட்டம் அளிக்கும் மிகச் சிறப்பான பகுதி நேர வேலை வாய்ப்பைப் பயன்படுத்தினால்

- உங்களது குடும்ப வருவாய் கூடுதலாகும்
- உங்கள் ஓய்வு நேரத்தைப் பயனுள்ள வகையில் பயன் படுத்தலாம்
- சமூகத் தொடர்புகள் ஏற்படுத்திக் கொள்ளலாம்
- நாட்டின் நலனுக்குப் பணியாற்றலாம்



**சேமிப்பு மாதர் தலைவராக உங்கள் பணி**

நீங்கள் வசிக்கும் வட்டாரத்தில் உள்ள வீட்டுப் பெண்மணிகளுடன் தொடர்பு கொள்வது; முறையாக பணம் சேமிக்குமாறு அவர்களைத் தூண்டுவது; அவர்களுடைய சேமிப்புத் தொகைகளை ஒவ்வொரு மாதமும் திரட்டுவது; அந்தத் தொகைகளை இதற்கென ஒதுக்கிய தபால் நிலையத்தில் கொடுப்பது.

நீங்கள் திரட்டிய பணத்திற்கு 2½% கமிஷன் உங்களுக்குக் கிடைக்கும்.
சேமிப்பு மாதர் தலைவர்கள் நாட்டின் எல்லா நகரங்களுக்கும் முக்கியமான ஊர்களுக்கும் தேவைப்படுகிறார்கள்.

விவரங்களுக்கு மனுச் செய்யுங்கள்
**நேஷனல் சேவிங்ஸ் கமிஷனர் தபால் பெட்டி எண். 96 நாக்பூர்.**

NATIONAL SAVINGS ORGANIZATION

davp 72/19

கல்கி

மலர் 32
இதழ் 22



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்

# வெண்ணிலவில் மற்றொரு வெற்றி

அமெரிக்க விண்வெளி வீரர்கள் அப்போலோ—17ல் சந்திரனுக்குக் கடைசி முறையாகச் சென்று, தங்களுக்கு இட்ட கட்டளைகளை வெற்றிகரமாக நிறைவேற்றி, பூமிக்குத் திட்டமிட்டபடி சௌக்கியமாகத் திரும்பி வந்ததற்கு, அவர்களை உலகம் பாராட்டுகிறது.

அப்போலோ திட்டத்தின் மூலம் செய்ய வேண்டிய சந்திர மண்டல ஆராய்ச்சிகள் அனைத்தும் இத்துடன் முடிவுறுகின்றன. சுமார் 7000 மணிகள் மனிதன் விண்வெளியில் சஞ்சரித்திருக்கிறான். சந்திரனின் மேற்பரப்பில் பல மைல்கள் ஊர்தியில் சென்று அனுபவம் பெற்றிருக்கிறான். சுமார் 300 பவுண்டு சந்திரனின் கற்களைக் கொண்டுவந்திருக்கிறான். சந்திரனைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டிய எல்லா விவரங்களையும் தெரிந்து கொள்ள, இதுவரையில் சேகரித்த பொருள்களும் விவரங்களும் போதுமானதென்று சந்திர மண்டல ஆராய்ச்சியை இத்துடன் நிறுத்திக் கொள்ள அமெரிக்கா தீர்மானித்துள்ளது. விண்வெளி விஞ்ஞானத்தின் முன்னேற்றம் பிரமிக்கும்படி வளர்ந்திருப்பது குறித்து உலகமே வியக்கிறது. விண்வெளி வீரர்களும் அசாதாரண சாமர்த்தியத்துடன் நடந்து கொண்டார்கள். அவர்கள் இடைவிடாது பூமண்டலத்துடன் தொடர்பு வைத்துக் கொள்ளவும் துளியும் தவறாது விண்வெளியில் உலவுவது உள்பட எல்லாக் காரியங்களையும் செய்து முடிக்கவும் உறுதுணையாக இருந்த அமெரிக்க விஞ்ஞானிகளை உலகம் பாராட்டுகிறது. இதில் நாமும் கலந்து கொள்கிறோம்.

விண்வெளிப் பயணம், ஆராய்ச்சிகளில் ருஷ்யாவும் அமெரிக்காவும் பரஸ்பரம் ஒத்துழைக்க முன்வந்துள்ளது மகிழ்ச்சிக்குரிய விஷயம். அடுத்தாற்போல் விண்வெளியில் ஒரு பரிசோதனைச் சாலையையே ருஷ்ய, அமெரிக்கக் கூட்டு முயற்சி அமைக்கக் கூடும் என்பது மிக மிக நல்ல செய்தி. ஒத்துழைப்புப்பான்மை வேறு பல துறைகளிலும் பரவி அகில உலகுக்கும் நன்மைகள் பெருகட்டும்.

அப்போலோ-17 விண்வெளி வீரர்களான டாக்டர் ஹாரிஸன் ஸ்மிட், ரோலந்து இவான்ஸ், யூஜின் ஸெர்னன் ஆகியோர் சந்திரமண்டலப் பிரயாணத்துக்குத் தயாராக இருப்பதைக் காணலாம்.

இரட்டை நாயனம்!

மாநில சுயாட்சி

தமிழகத்தில் தமிழன் ஆட்சி

மாலை முரசு தினத்தந்தி

இவங்க கிளப்புற சத்தம்
போறாதுன்னு மைக் வேறே!
















# இசை விழாத் தொடக்கம்

1. சென்னையில் இசை விழா நடந்து கொண்டிருக்கிறது. மியூஸிக் அகாடமியின் நாற்பத்தியாறுவது இசைவிழாவைப் பாரத ராஷ்டிரபதி ஸ்ரீ வி. வி. கிரி தொடங்கி வைத்தார். இந்த வருஷம் சங்கீத கலாநிதி விருது பெறும் பேராசிரியர் ஸ்ரீ பி. சாம்பமூர்த்திக்கு அளிக்கப்பட்ட விருதுப் பத்திரத்தை ராஷ்டிரபதிக்குக் காட்டி மகிழ்கிறார் அகாடமித் தலைவர் ஸ்ரீ டி. எஸ். ராஜம். அவருக்கு அருகே மியூஸிக் அகாடமி காரியதரிசி டாக்டர் வே. ராகவன்.

2. ஸ்ரீ சாம்பமூர்த்தி அவர்களுக்கு அகாடமியின் சார்பில் மாலையிட்டு மரியாதை செய்கிறார் ஸ்ரீ ரங்கநாதன்.

3. இந்த ஆண்டு தமிழிசை விழாவில் இசைப் பேரறிஞர் விருது பெற்றவர் கவிஞர் ஸ்ரீ ம. ப. பெரியசாமி தூரன். அவருக்குப் பட்டத்தை வழங்குகிறார் தமிழக சுகாதார அமைச்சர் திரு அன்பழகன்.

4. இந்தியன் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியின் நாற்பதாவது இசை மகாநாட்டைத் தொடங்கி வைத்தவர் தமிழக கவர்னர் ஸ்ரீ கே. கே. ஷா அவர்கள். 'சங்கீத கலா சிகாமணி' விருதைப் பெற்றவர் திருவீழிமிழலை ஸ்ரீ சுப்பிரமணிய பிள்ளை.

5. நாதசுர வித்வான் திருவீழிமிழலை சுப்பிரமணிய பிள்ளைக்கு மாலை சூட்டி மகிழ்கிறார் பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியின் தலைவர் திரு வி. எம்பெருமானுர் செட்டி.

# தமிழ் நாட்டிலே... தீரன்

## ஸ்ரீரங்கம் கோவில் நிகழ்ச்சி

பாளையங்கோட்டையில் ஒரு பேராசிரியர் போலீசாரால் தாக்கப்பட்டது, திருச்சி கிளைவ் ஹாஸ்டலில் நடந்த கொடுமைகள் ஆகியவற்றைப் பார்த்து போலீஸ் ஏன் இவ்வளவு எல்லைமீறி நடக்கிறது என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கும்போதே ஸ்ரீரங்கம் கோவிலிலும் அப்படி ஒரு நிகழ்ச்சி நடந்திருக்கிறது. வைகுண்ட ஏகாதசியை ஒட்டிய இராப்பத்து விழாவின் இரண்டாவது தினத்தில் தேவஸ்தான அக்கௌண்டெண்டை ஒரு போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் மூர்க்கத்தனமாகத் தாக்கியதாகவும் அதனால் விளைந்த குழப்பங்களினால் வெளியே பக்தர்கள் மூன்று மணி நேரத்துக்கு அதிகமாகக் காத்திருக்க நேர்ந்ததாகவும் பத்திரிகைகளில் செய்திகள் வெளி வந்திருக்கின்றன.

பந்தோபஸ்து அலுவலுக்காக ஸ்ரீரங்கத்துக்கு வந்திருந்த குன்னம் போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் உமாசங்கர் என்பவர் தம்முடன் மற்றும் சிலரையும் அழைத்துக் கொண்டு பத்து மணிக்கு மேல் வந்து நாழிக்கோட்டான் வாயிலைத் திறந்து மூலவரைத் தரிசிப்பதற்காக உள்ளே போக முயன்ற போது, அங்கே அலுவலில் இருந்த தேவஸ்தான அக்கௌண்டெண்ட், உற்சவரைக் கர்ப்பக்கிருகத்திலிருந்து புறப்பாட்டுக்கு எழுந்தருளச் செய்யும் ஏற்பாடுகள் நடைபெற்றுக் கொண்டிருப்பதாகவும், காலை நேர முத்தங்கி சேவை முடிந்து விட்டதாகவும், சற்று நேரம் காத்திருந்தால் போலீஸ் அதிகாரியும் அவரது நண்பர்களும் முத்தங்கி சேவையைக் காணலாம் என்றும் பதில் கூறியிருக்கிறார். கோபமடைந்த சப்-இன்ஸ்பெக்டர் அந்த அக்கௌண்டெண்டைத் தனித் தனியே இரு தடவைகளில் பலமாக அடித்தும் தாக்கியும் இருக்கிறார். தீவிர எதிர்ப்புக் கிளம்பவே போலீஸ் மேலதிகாரிகள் வந்து பார்த்த பின் தவறாக நடந்து கொண்ட சப்-இன்ஸ்பெக்டர் விசாரணை முடியும்வரை 'சஸ்பெண்ட்' செய்யப்பட்டிருக்கிறார். சட்டம் ஒழுங்கைப் பாதுகாக்க வேண்டிய போலீஸ் அதிகாரிகளே இப்படி அடிதடியில் இறங்கினால் அப்புறம் அடிதடிகளே சட்டமாகிவிடும்போலிருக்கிறது. அப்படி ஆக விடலாமா? இந்த நாட்களில் போலீஸ் அதிகாரிகளுக்கு இப்படியெல்லாம் தாறுமாறாக நடக்கத் துணிவு வரக் காரணம் என்ன என்ற அடிப்படையையும் ஆராய வேண்டும்.



## எல்லோருமே வற்புறுத்துகிறார்கள்

டில்லி சென்று பிரதமர் இந்திரா காந்தியைச் சந்தித்துள்ள திரு மதியழகன் தமிழக நிலவரம் பற்றிப் பேசியிருப்பதுடன், ''தமிழ் நாட்டு நிலைமைகளை நேரில் கண்டறிய வசதியாக மத்திய அதிகாரிகள் குழு ஒன்றை உடனே தமிழகத்துக்கு அனுப்ப வேண்டும். தி. மு. க. அரசு மீது கூறப்பட்டுள்ள லஞ்ச ஊழல் புகார்களை விசாரிக்க ஒரு விசாரணைக் கமிஷனை நியமிக்க வேண்டும்'' என்றெல்லாம் பிரதமரிடம் கோரியிருக்கிறார். இதே கோரிக்கைகளுடன் மதுரைக்கு ஜனவரி 5ந் தேதி விஜயம் செய்யும் பிரதமர் இந்திரா காந்தியைச் சந்தித்து மகஜர் கொடுக்கப் போவதாக எம். ஜி. ஆரும் கூறியிருக்கிறார். சென்னையில் எழும்பூர் வட்ட சுதந்திரக் கட்சியின் அரசியல் மகாநாட்டில் பேசும்போது மேலவை உறுப்பினர் திரு ஜி. சுவாமிநாதன், ''ஊழல் புகார்கள் பற்றியும், தமிழ்நாடு அரசாங்கம் அவற்றுக்குத் தந்துள்ள பதில்கள் பற்றியும் பரிசீலனை செய்ய ஒரு விசாரணைக் கமிஷன் அமைக்க வேண்டியது அவசியம்'' என்று வற்புறுத்தியிருக்கிறார். தமிழ்நாடு அமைச்சரவைக்கு எதிரான புகார்களை விசாரிக்க சுப்ரீம் கோர்ட் நீதிபதி தலைமையிலான குழு ஒன்று அமைக்கப்பட வேண்டும் என்று இதே மகாநாட்டில் தீர்மானமும் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. வேறு பல அரசியல் கட்சிகளும் இதே குரலை எழுப்பியிருக்கின்றன. 'விசாரணைக் கமிஷன்' என்பதே எங்கும் பேச்சாயிருக்கிறது.

## மவுண்ட்ரோட்டில் 88 கிரவுண்ட் — மலிவான விலை

மவுண்ட் ரோட்டில் அபட்ஸ்பரி அருகே தி. மு. க. டிரஸ்டுக்காக 88 கிரவுண்டு நிலம்

**அட்டைப்படம்:** காந்தி கிராமத்தின் வெள்ளி விழா ஆண்டினையொட்டி விசேஷக் கட்டுரையொன்று இவ்விதழ் 52ம் பக்கத்தில் இடம் பெறுகிறது. காந்தி கிராமத்தின் காட்சிகள் சிலவற்றையும் அதனைத் தொடங்கி, ஒரு காந்தியப் பல்கலைக் கழகமாகவே வளர்த்துப் பெருமையுற்ற ஸ்ரீமதி சௌந்தரம் ராமச்சந்திரன் அவர்களையும் அட்டைப்படத்தில் காணலாம்.

பத்திரச் செலவு உட்படச் சுமார் பத்தரை லட்ச ரூபாய்க்கு வாங்கப்பட்டிருப்பதாகவும் அந்த இடத்தில் ஒரு கிரவுண்டின் இப்போதைய மார்க்கெட் விலை சுமார் 35 முதல் 40 ஆயிரம் வரை இருப்பதால் மார்க்கெட் நிலவரப்படி பார்த்தாலும் முப்பது லட்சத்துக்குமேல் விலை ஆகுமே என்றும் எதிர்க் கட்சிகளின் தலைவர்கள் விமர்சித்துப் பேசிய பேச்சுக்கள் பத்திரிகைகளில் வந்துள்ளன. அதை ஒட்டி முதல்வர் எதிர்க் கட்சித் தலைவர்களுக்கு விடுத்த சவாலும் பத்திரிகைகளில் வெளி வந்திருக்கிறது. பத்திரிகைச் செய்திகளில் வந்துள்ளதைக் கொண்டு பார்க்கும்போது மேற்படி இடத்தில் இவ்வளவு மலிவாக நிலம் கிடைக்க முடியும் என்பது உண்மையானால் அது மிகப் பெரிய ஆச்சரியம்தான்.

## வெள்ள நிவாரண நிதியில் பாரபட்சம்

தமிழ்நாட்டில் சமீபத்திய வெள்ளத்தால் பாதிக்கப்பட்டவர்களுக்குச் செய்யப்படும் உதவிகளில் பாரபட்சம் காட்டப்படுவதாகச் சொல்லப்படுகிறது. ஆளும் கட்சிப் பிரமுகர்களுக்கு வேண்டியவர்கள் விரைந்து கவனிக்கப்படுவதாகவும், மற்றவர்களைக் கவனிப்பதில் சிரத்தை காண்பிப்பதில்லை என்றும் கூறப்படும் புகார்கள் உண்மையாயிருக்கும் பட்சத்தில் கண்டிப்பதற்குரியன. வீடு வாசல் இழந்தவர்களுக்குச் சில இடங்களில் உணவு உடை வசதி சரியானபடி செய்யப்படவில்லையாம். சில இடங்களில் பெரும்பாலானவர்கள் அடங்கிய ஒரு பெரிய குடும்பத்துக்கு வெறும் ஐம்பது ரூபாய் மட்டுமே தரப்படுகிறதாம். இந்த அவல நிலையிலும் உரியவர்களுக்கு முழு உதவிகளும் போய்ச் சேராமல் நடுவே திருடுகிறவர்களால் பல பொருள்கள் போய்விடுகின்றன என்கிறார்கள். வீடு வாசல் இழந்து தெருவில் நிற்பவர்களுக்குப் போய்ச் சேரும் உதவிகளிலேயே இடைத்தரகர்களின் கொள்ளை இருந்தால் அப்புறம் யார்தான் காப்பாற்ற முடியும்? அகதிகளும் அநாதைகளும் எந்தக் கட்சிக்கு வேண்டியவர்கள், எந்தக் கட்சிக்கு வேண்டாதவர்கள் என்று பார்த்துத்தான் உதவி செய்வது என்று ஆரம்பித்து விட்டால் அப்புறம் இப்படிப்பட்ட காரியங்களுக்கு உதவி என்ற பெயரே பொருத்தமில்லாமல் போய்விடும்.

## யாருமே தேறவில்லை!

தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ள இரண்டு அரசாங்க உயர்நிலைப் பள்ளிகளில் 1971ம் ஆண்டு நடைபெற்ற இறுதித் தேர்வுகளில் (எஸ். எஸ். எல். ஸி.) ஒருவர்கூடத் தேறவில்லை என்று தமிழ்நாடு கல்வி அமைச்சர் மேலவையில் ஒரு கேள்விக்குப் பதில் சொல்லும்போது தெரிவித்திருக்கிறார். தெரிவித்ததோடு அமையாமல் இந்த இரு பள்ளிகளின் தரத்தையும் உயர்த்துவதற்காக, 'பள்ளி மாணவர்களுக்கு விசேஷப் பயிற்சி அளிக்கப்பட வேண்டும் என்றும், மாணவர்களின் திறமையை அதிகரிக்க வீட்டுப் பாடங்கள் தரவும், வகுப்புக்கள் நடத்தவும் வேண்டும் என்றும் தென்னார்க்காடு மாவட்டக் கல்வி அதிகாரிகள் அறிவுறுத்தியிருக்கிறார்கள்' என்றும் அமைச்சரே மேலும் அவையில் கூறியிருக்கிறார். அமைச்சரின் பதிலைத் தொடர்ந்து அந்த இரு பள்ளிகளிலும் ஆண்டு முழுதும் ஆசிரியர்கள் இருந்தார்களா என்றும், அந்தப் பள்ளி ஆசிரியர்களைக் கேட்டால், 'தங்களுக்குப் பலவசதிகள் இல்லை' என்று கூறுவார்களே என்றும் சரமாரியாகக் கேள்விகள் கேட்கப்பட்டிருக்கின்றன. அமைச்சருடைய பதிலில் கும்பகோணம் நகராட்சிப் பள்ளியில் நூற்றுக்கு நூறு மாணவர்கள் தேறியிருப்பதையும் சுட்டிக் காட்டியிருக்கிறார். கும்பகோணத்துக்காகத் தென்னார்க்காடு பெருமைப்பட முடியுமா என்ன?

## முதல்வருக்கு ஒரு கேள்வி

"நோயே இல்லாதவர் எப்படி மருத்துவரிடம் செல்லத் தேவையில்லையோ, தவறே செய்யாதவர் விசாரணைக் குழு முன் எப்படி ஆஜராக வேண்டியதில்லையோ — அதைப் போல் இல்லாத ஊழல் புகார்களுக்கு எப்படி விசாரணைக் கமிஷன் அமைக்க முடியும்?" என்று தமிழக முதல்வர் கருணாநிதி வழக்கமான தம்முடைய பாணியில் உபமான உபமேயங்களோடு கேட்டிருக்கிறார். "சீதாதேவி தன் தூய்மையை உணர்த்துவதற்கு அக்கினிப் பிரவேசம் செய்ததைப் போல் தாங்கள் களங்கமற்றவர்கள் என்பதை உலகுக்கு உணர்த்த விசாரணைக் கமிஷன் அமைக்க வேண்டும்" என்று சட்டமன்ற ஸ்தாபன காங்கிரஸ் உறுப்பினர் பலராமன் கோரிய தற்குப் பதிலாகவே, "தமிழக சட்டமன்றத்தை விட வேறொரு தீக்குண்டம் இருப்பதாகநான்கருதவில்லை. சட்டப் பேரவை என்ற அந்தத் தீக்குண்டத்தில் மூழ்கி எழுந்து விட்ட பிறகு (சட்டமன்றத்தில் நம்பிக்கை



வோட்டு பெற்ற பின்) வேறு குண்டத்தில் (விசாரணைக் கமிஷன்) மூழ்கத் தேவையில்லை" என்ற வாசகங்களை முதல்வர் கூறியிருக்கிறார். இல்லாத குற்றத்துக்குத்தானா முதல்வர் இவ்வளவு பெரிய முழு நீளப் பதில் எழுத நேர்ந்தது என்று முதல்வரைக் கேட்கலாம் போல் தோன்றுகிறது நமக்கு! ஆளும் கட்சி உறுப்பினர்களும் ஆதரவுக் கட்சிகளும் மட்டுமே வாக்களித்த நம்பிக்கைத் தீர்மானத்தால் ஓர் அக்கினிப் பிரவேசம் நடந்ததாக எப்படி ஒப்புக்கொள்ள முடியும்? முதல்வரின் நீண்ட உதாரணம் நன்றாயிருக்கிறது. ஆனால் நியாயமாக இல்லை. வேண்டியவர்கள் சரி என்பதாலேயே தீக்குண்டப் பரீட்சையில் வெற்றி பெற்றுவிட்டதாக அர்த்தமாகி விடாது.

# வையகம் துயர் தீரவழி

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

சென்ற ஐம்பது வருடங்களுக்குள் எவ்வளவோ மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. அதற்கு முன் ஐயாயிரம் வருடங்களில் ஏற்பட்ட மாறுதல்களை விட இந்த ஐம்பது வருட மாறுதல்கள் அதிகம் என்றே சொல்லலாம். இந்த ஐம்பது வருட மாறுதல்களிலிருந்து நமக்கு ஏற்பட்ட அநுபவம் மிகப் பெரிது. இவ்வளவு அநுபவங்களினின்றும் ஒரு விஷயம் மாத்திரம் தீர்மானமாகத் தெரிகிறது. மனிதர்கள் எவ்வளவுக் கெவ்வளவு பகவானிடத்திலிருந்தும் தர்ம நூல்களினின்றும் விலகுகிறார்களோ, அவ்வளவுக் கவ்வளவு துன்பங்களுக்கு உள்ளாகிறார்கள். அறிவுச் சக்தியோ ஆற்றலோ அதிகப்படப்பட உலகத்துக்கு ஆபத்தும் அதிகரிக்கிறது. பக்தியும் சாந்தமுமே இவைகளுக்கு எல்லாம் உற்ற மருந்து. உண்மை பக்தியும் சாந்தமும் உலகில் பரவப் பரவ போலீசுக்கும், நீதிமன்றங்களுக்கும், சைன்யங்களுக்கும் வேலை குறையும். ஆதலால் ஆட்சி மன்றத்தின் முதற் கடமை பக்தியையும் சாந்தத்தையும் பரவச் செய்வதே.

ஆனால் ஆட்சி மன்றத்தினரோ தாம் மதச் சார்பற்றவர்கள் என்று தீர்மானித்துக்கொண்டிருக்கிறபடியால் பக்திப் பிரசாரம் அத்தீர்மானத்துக்கு மாறுபட்டதாகிவிடுமோ என்று சந்தேகித்து இவ்வழி திரும்பாமலிருக்கலாம். எப்படி விருப்பினும் மக்களில் அறிந்தோருடைய கடமை மக்களுக்கு உண்மையான நலனைக் கோருவதே. மக்களுக்கு உண்மையான நலன் நம்மை விட்டுப் பிரிய முடியாத பேர் உறவினரான ஆண்டவனிடம் அன்பு செலுத்துவதனாலேயே வளரும். இது ஐம்பதாண்டுகளில் நமக்கு ஏற்பட்ட அனுபவத்தின் சாரம்.

ஒவ்வொரு ஊரிலும் அநேக சங்கங்கள், குழுக்கள் நிறுவப்படுகின்றன. ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு குறிக்கோள் உண்டு. ஒவ்வொன்றும் சிற்சில சமயங்களில் மற்றவைகளுடன் முரண்பட்டு ஊரிலும் நாட்டிலும் வெறுப்பு, கசப்பு முதலியவைகளுக்குக் காரணமாக முடிகிற நிலையில் நிகழ்வதாகப் பார்க்கிறோம். ஆதலால் எல்லாக் கசப்பையும் இனிப்பாக மாற்றக் கூடியதும், எல்லாப் புரட்சிகளையும் அன்பாக மாற்றக் கூடியதுமான ஒரு கழகம் நமக்குத் தேவையாகிறது. பக்தி மார்க்கம் என்னும் வழிபாட்டைப் பரப்பும் கழகங்களே இவை. இந்த வழிபாட்டுக் கழகங்களே இப்போதும், எப்பொழுதுமே தேவை. மற்ற எல்லா அம்சங்களையும், கழகங்களையும் சாந்த முறையில் சேர்ப்படுத்தும் சாதனம் வழிபாட்டுக் கழகங்களே. ஏழு கோடி கிராமங்களிலும் சாந்த முறையில் ஒவ்வொரு கிராமத்துக்கும் வழிபாட்டுக் கழகம் நிறுவ நாம் எல்லோரும் முனைந்து முயற்சி செய்து ஈசன் அருளைத் துணைகொண்டு அப்பணியை முடித்தோமானால் நாமும் சேர்ப்பட்டு, நம் நாட்டில் உள்ள எல்லாக் கட்சிகளும் சேர்ப்பட்டு நாடு ஒரே அன்பு மயமாகும். ஒரு நாட்டின் மூலம் உலகமும் சாந்தியாகி, ''லோகா ஸமஸ்தாஸ்ஸுகினோ பவந்து'' ''வையகம் துயர் தீர்கவே'' என்ற நமது வேத நெறியின் சிறப்புக் கொள்கை புத்துயிர் பெற்று நிலவும்; நிலவவும் வேண்டும்.



நவீன விஞ்ஞான வளர்ச்சிகளாலேயோ, பண வீக்கம் முதலியவைகளாலேயோ, பரஸ்பர அவநம்பிக்கைகளாலேயோ ஏற்படக் கூடிய எந்தப் புரட்சிகளையும் வெகு சாந்தமான முறையில் சமாளிக்கக்கூடிய வழிபாட்டுக் கழகங்களை நிறுவும் பணியில் நாம் எல்லோரும் ஒன்றுபட்டு, எஞ்சியிருக்கும் நமது வாழ்நாட்களைப் பயன்படுத்தித் தொண்டு புரிவோமாக!'' ''நம் கடன் பணி செய்து கிடப்பதே!''

ஆண்மை—
திடவடிவம்,
தீரம், திறமை,
கம்பீரம்.
ஆண்மையின்
பன்முகப்
பண்புகளைப்
படித்தறிந்த
படைப்பு
'எஸ்டர்காட்'



எஸ்டர்காட்®

ஆண்மகன் இதோ ஆளவருகிறான். எங்கும் அவன் செங்கோல். 'எஸ்டர்காட்' அவன் உடுப்பு.
'எஸ்டர்காட்' பாலியெஸ்டர் இழைகலந்த காட்டன் சூட்டிங்குகள். தவிர, 'மெஃப்ரின்' 100% பாலியெஸ்டர் சேலைகள், பாலியெஸ்டர் இழைகலந்த உடுப்புத் துணிகள்; 'டெரோஸெல்' பாலியெஸ்டர் இழைகலந்த காட்டன் ஷர்ட்டிங்குகள்.

**மபத்லால் க்ரூப்**

AIYARS-M.300 TM

# அலை ஓசை

அமரர் கல்கி

## 23. உல்லாச வேளை

உலகத்து மாநகரங்களுள்ளே நவ யௌவன சௌந்தரியம் பெற்று விளங்குவது கல்கத்தா நகரம். அந்த நகர சுந்தரியின் வனப்பு மிக்க தோள்களில் மேலே மிதந்து அசைந்தாடிக் கொண்டிருந்த நீலப் பட்டு உத்தரீயத்தைப் போல் இனிய புனல் ததும்பிய ஏரி ஒய்யாரமாக நீண்டு நெளிந்து கிடந்தது. நீல உத்தரீயத்தின் ஓரங்களில் அமைந்த பச்சை வர்ணக் கரையைப் போல் ஏரிக் கரையோரமாகப் பசும் புல் பரந்திருந்தது.

ஏரியின் நடுவே மரகதச் சோலைகள் செழித்து வளர்ந்திருந்த தீவு சித்திரக் கலைஞனுடைய கற்பனைச் சித்திரமோ என்று சொல்லும்படி விளங்கியது.

ஏரி நீரில் ஆங்காங்கு சில வெண்ணிறப் பறவைகளும் உல்லாசப் படகுகளும் மிதந்து கொண்டிருந்தன.

ஏரியின் மத்தியில் இருந்த சோலைத் தீவிலிருந்து புள்ளினங்கள் கோஷ்டி கானமாகப் பாடிய நாதகீதங்கள் இளங் காற்றில் மிதந்து வந்து நாலா புறமும் இசை இன்பத்தைப் பரப்பின.

உல்லாசத்துக்குரிய மாலை வேளையில் ஏரிக்கரையோரத்துப் பசும்புல் தரையில் ஆங்காங்கு ஆடவரும் பெண்டிரும் கும்பலாகக் காணப்பட்டனர்.

சிலர் ஏகாந்தமாகப் புல் தரையில் சாய்ந்து கொண்டு பகற் கனவு கண்டு கவிதை புனைந்து கொண்டிருந்தனர்.

சிலர் கூட்டமாக உட்கார்ந்து கார சாரமான வாதப் பிரதிவாதங்கள் செய்து கொண்டிருந்தனர்.

வயது முதிர்ந்த தம்பதிகள் அளவளாவிப் பேசி மகிழ்ந்தனர்.

இளமையின் இன்பத்தில் திளைத்த காதலர்களும் புது மணம் புரிந்த தம்பதிகளும் வாய்ப் பேச்சுக்கு அவசியத்தைக் காணாது கண்களோடு கண்களும் இதயத்தோடு இதயமும் பேசும்படி விட்டுக் களிப்படைந்தனர்.

அதோ, அந்த இளம் தம்பதிகள் யார் நமக்குத் தெரிந்தவர்களைப் போலத் தோன்றுகிறார்களே? — ஆம்; தெரிந்தவர்கள்தான். தேவபட்டணம் தாமோதரம் பிள்ளையின் குமாரன் அமரநாதனும் அவனுடைய மனைவி சித்ராவும் தான்.

"இந்தக் கல்கத்தா ஏரிக் கரையின் அழகு திருச்செந்தூர்க் கடற் கரைக்குக்கூட வராது!" என்றாள் சித்ரா.

"உனக்கு இன்னமும் இந்த வங்க நாட்டு மோகம் விடவில்லை போலிருக்கிறது. எனக்கு இந்த ஏரிக் காட்சி இப்போதெல்லாம் அவ்வளவாக இன்பம் அளிக்கவில்லை. இதைப் பார்க்கும்போது துக்கம்தான் உண்டாகிறது. வங்க மாதா தன் அருமை மக்களின் பரிதாப நிலையை எண்ணிச் சொரிந்த கண்ணீர் இந்த ஏரியில் நிறைந்து ததும்புவதாக எனக்குத் தோன்றுகிறது" என்றான் அமரநாத்.

"ஒரு சமயம் இந்த ஏரியைப் பற்றி நீங்கள் வேறு விதமாக வர்ணித்தது எனக்கு நினைவிருக்கிறது. 'பங்கிம் சந்தருடைய நாவல்களையும் ரவீந்திரரின் கவிதைகளையும் படித்து விட்டு வங்க மாதா பொழிந்த ஆனந்தக் கண்ணீர் இந்த ஏரியில் நிறைந்து ததும்பிக் கொண்டிருக்கிறது!' என்று சொன்னீர்கள். அந்தப் பரவசமெல்லாம் இப்போது எங்கே போயிற்று?"

"அதையெல்லாம் இந்தப் பயங்கரமான பஞ்சம் அடித்துக் கொண்டு போய் விட்டது. மூன்று மாத காலமாகத் தினம் தினம் சாலையின் இரு பக்கங்களிலும் பட்டினியால் செத்துக் கிடப்பவர்களின் பிரேதங்களைப் பார்த்துக் கொண்டிருந்த பிறகு கதையாவது, கவிதையாவது, காவியமாவது என்று தோன்றுகிறது. சுத்தப் பைத்தியக்காரத்தனம்! அதனால்தான் காந்தி மகாத்மா சொன்னார்: 'மக்கள் பசியால் வாடும் நாட்டில் கலை என்ன, கவிதை என்ன, பாடல் என்ன?' என்றார். 'இராட்டையின் ரீங்காரமே இனிமையிலும் இனிமையான சங்கீதம்' என்றார். மகாத்மாவுக்கும் டாகூருக்கும் இதைப் பற்றி ஒரு சமயம் பலத்த விவாதம் நடந்தது. நான் அப்போது டாகூரின் கட்சிதான் சரி என்று எண்ணினேன். இந்த மூன்று மாதத்துப் பயங்கரங்களைப் பார்த்த பிறகு, பதினாயிரக்



கணக்கான ஜனங்கள் பசிக்குச் சோறின்றித் தெரு வீதிகளில் விழுந்து செத்து மடிவதைப் பார்த்த பிறகு மகாத்மா சொல்வதுதான் சரியென்று எண்ணுகிறேன்.''

''இந்த வங்க நாட்டு ஜனங்கள் இவ்வளவு தேசபக்தியும் கடவுள் பக்தியும் உள்ளவர்களாயிற்றே! கடவுள் எதற்காக இவர்களை இப்படிச் சோதிக்கிறாரோ, தெரியவில்லையே!'' என்று சித்ரா பரிதவித்துக் கூறினாள்.

''வங்காளிகள் நல்லவர்கள்தான்! ஆனால் இவர்களிடம் பெரிய துர்க்குணம் ஒன்றும் இருக்கிறது. குறுகிய மாகாணப் பற்று அதிகம் உள்ளவர்கள். இவர்களுக்கு 'வங்காளிகள் தேவ ஜாதிகள்; மற்ற நாட்டார் எல்லோரும் நீசச் சாதிகள்' என்று எண்ணம். மதராஸியையோ, பம்பாய்க்காரனையோ கண்டால் இவர்களுக்குப் பிடிப்பதில்லை. இவர்கள் மட்டும் லாகூர் வரைக்கும் சென்று உத்தியோகம் பார்ப்பார்கள். ஆனால் மற்ற மாகாணத்தார் இங்கே வந்து பிழைப்பது இவர்களுக்குப் பிடிப்பதில்லை. அந்தக் கெட்ட குணத்துக்காகத்தான் கடவுள் இவர்களை இப்படித் தண்டித்திருக்கிறார்!'' என்றான் அமரநாத்.

''கடவுளை அவ்வளவு கொடுமையானவராக ஆக்கி விடுகிறீர்களே! கிருஷ்ண சைதன்யரும் ராமகிருஷ்ண பரமஹம்ஸரும் விவேகானந்தரும் அவதரித்த நாட்டின் மக்களைக் கடவுள் அவ்வளவு கருணை இல்லாமல் தண்டிப்பாரா? சுரேந்திர நாதரும் தேசபந்துவும் சுபாஷ் போஸும் பிறந்த நாட்டின் மக்கள் கொஞ்சம் மாகாணப் பற்று உள்ளவர்களாயிருந்தால்தான் என்ன?''

''பின்னே நீ என்ன காரணம் சொல்கிறாய்? வங்காளிகள் எதற்காக இவ்வளவு பயங்கரமான கஷ்டத்துக்கு உள்ளாக வேண்டும்?''

''எல்லாம் மனிதர்கள் செய்கிற காரியந்தான். பணத்தாசை பிடித்த பேய்கள் விளைந்த தானியத்தையெல்லாம் வாங்கி முடக்கி விட்டால் பஞ்சம் வராமல் என்ன பண்ணும்?''

''அந்தக் கொடிய மனிதர்களையும் கடவுள்தானே சிருஷ்டித்தார்? 'எல்லா உயிர்களிலும் இறைவன் இருக்கிறார்' என்று நம்முடைய வேத சாஸ்திர புராணங்கள் எல்லாம் சொல்லுகின்றனவே! ஆகையால் 'மனிதன் செய்தாலும் அதன் பொறுப்பு கடவுளின் தலையிலேதானே விழும்?''

''உங்களோடு விவாதம் செய்ய முடியாது. நீங்கள் இந்தக் கம்யூனிஸ்ட்களுடன் சேர்ந்து இப்படி நாஸ்திகராகப் போய் விட்டீர்கள்! நான் உங்களோடு பேசத் தயாராக இல்லை!'' என்றாள் சித்ரா.

''போகட்டும்; கம்யூனிஸ்டுகளால் இந்த ஒரு நன்மையாவது நிச்சயம் இருக்கிறது. அவர்களுடைய சகவாசத்தினால் ஒரு பெண்மணியின் வாயை மூடி மௌனமாகச் செய்ய என்னால் முடிந்ததல்லவா?'' என்று கேலி செய்தான் அமரநாத்.

''வீண் ஆசை! அந்த மாதிரி எண்ணி நீங்கள் கர்வம் கொள்ள வேண்டாம். வங்க நாட்டுக்கு இந்தக் கொடும் பஞ்சத்தை அனுப்பியவர் கடவுளாக இருந்தால் அதனாலும் ஏதோ ஒரு நன்மை ஏற்படும் என்பது நிச்சயம். இந்த வங்காளத்தில் பஞ்சம் வருவது இது முதல் தடவையல்ல. முன்னேயும் வந்திருக்கிறது. 'ஆனந்த மடம்' கதையில் வங்க நாட்டில் அப்போது பரவியிருந்த பயங்கரமான பஞ்சத்தைப் பற்றிப் பங்கிம் சந்திரர் எப்படி வர்ணித்திருக்கிறார் என்று ஞாபகம் இருக்கிறதா? அந்தப் பஞ்சத்தின் காரணமாக ஒரு பெரும் புரட்சி தோன்றியது. மகேந்திரன், கல்யாணி, ஜீவானந்தன், சாந்தி, பவானந்தன், ஸத்தியானந்தர் முதலிய சுதந்திர வீரர்கள் உதயமானார்கள். 'வந்தேமாதரம்' என்னும் மகா மந்திரமும் ஏற்பட்டது. இப்போது இந்தப் பஞ்சத்தின் காரணமாகவும் ஒரு பெரும் புரட்சி ஏற்படப் போகிறது.

குமுறிக் கொண்டிருக்கும் எரிமலை வெடிக்கப் போகிறது. அந்த எரிமலை பொழியும் நெருப்பில் பிரிட்டிஷ் ஆட்சி எரிந்து பொசுங்கிவிடப் போகிறது. இந்தியா தேசம் சுதந்திரம் அடையப் போகிறது.

''இந்தியா சுதந்திரம் அடையட்டும்; நான் வேண்டாம் என்று சொல்லவில்லை; குறுக்கே நின்று தடுக்கவும் இல்லை. ஆனால் எனக்கென்னவோ சந்தேகந்தான். பஞ்சத்தில் அடிபட்ட ஜனங்கள் புரட்சி செய்வார்கள் என்று எனக்குத் தோன்றவில்லை. பசியினாலும் பஞ்சத்தினாலும் பிரஞ்சுப் புரட்சி ஏற்பட்டது என்று சொல்லுகிறார்கள். ஒரு வேளை அரை வயிறு பட்டினியாயிருப்பவர்கள் புரட்சி செய்யலாம். முழுதும் பட்டினி கிடப்பவர்கள் அடியோடு சக்தியை இழந்து சோர்ந்துவிடுகிறார்கள்; அல்லது செத்தே போய்விடுகிறார்கள். செத்துப் போனவர்கள் எப்படிப் புரட்சி செய்ய முடியும்? நீயே பார், சித்ரா! இந்த வங்காளப் பஞ்சத்தில் ஐம்பது லட்சம் பேர் செத்துப் போயிருக்கிறார்கள். இவர்களில் கால்வாசிப் பேர், ஒரு பத்து லட்சம் பேர், சுதந்திரத்துக்காக உயிரைவிடத் துணிந்திருந்தால் இந்தியா சுதந்திரம் பெற்றிருக்கும். அவ்வளவுகூட வேண்டாம்; ஒரு லட்சம் பேர் உயிரைவிடத் துணிந்து கிளம்பியிருந்தாலே போதும். ஆனால் வீதி ஓரங்களிலே விழுந்து செத்தாலும் சாவார்களேயன்றி நாட்டின் விடுதலைக்காக உயிரைக் கொடுக்க முன்வரமாட்டார்கள்......''

''ஏன் வரமாட்டார்கள்? பேஷாக முன்வருவார்கள். ஜனங்களை நடத்திச் செல்லத் தகுந்த நல்லவர்கள் இல்லாத தோஷந்தான். சுபாஷ் பாபு மட்டும் இச்சமயம் இங்கேயிருந்தால் கட்டாயம்



புரட்சி ஏற்பட்டிருக்கும். சுபாஷ் பாபு இப்போது மலாய் நாட்டில் சேர்த்து வரும் சைனியத்தில் இந்திய வீரர்கள் ஏராளமாய்ச் சேருகிறார்களோ, இல்லையோ? உயிரைக் கொடுக்கத் துணிந்து தானே அவர்கள் சேருகிறார்கள்? ஆகா! தலைவர் என்றால் சுபாஷ் பாபுவைப் போல் இருக்க வேண்டும்.''

''சுபாஷ் பாபுவின் பேரில் உன்னுடைய மோகம் இன்னும் போகவில்லை. சுபாஷ் பாபு வெற்றியடைந்தால் என்ன நடக்கும் தெரியுமா? இந்தியாவில் இங்கிலீஷ்காரர்களின் ஆட்சிக்குப் பதிலாக வங்காளிகளின் ஆட்சி ஏற்படும்!'' என்றான் அமரநாத்.

''ஏற்பட்டால்தான் என்ன? அந்நியர்களாகிய இங்கிலீஷ்காரர்களின் கீழ் அடிமைகளா யிருப்பதைக் காட்டிலும் வங்காளிகளின் ஆட்சியில் நாம் இருந்தால் என்ன?''

''இருந்தால் என்ன? ஒன்றுமில்லை. விஷயம் என்னவென்று உனக்குச் சொன்னேன், அவ்வளவுதான். பங்கிம் சந்திர சட்டர்ஜிதான் ஆனந்த மடம் எழுதியிருக்கிறாரே? அதில் யாரைத் தூக்கி வைத்தே எழுதியிருக்கிறார்? வங்க மாதாவின் புதல்வர்களைத்தான்! 'வந்தே மாதரம்' கீதத்தில் ஏழு கோடி மக்கள் என்றுதான் சொல்லியிருக்கிறார். அதை முப்பது கோடி என்று பின்னால் மாற்றினார்கள். எப்படியும் வங்காளிகளிடம் இந்தத் துர்க்குணம் இருக்கத்தான் இருக்கிறது. அதன் பலனைப் பார், சித்ரா! வங்காளம் இப்போது முஸ்லிம் லீக் மந்திரிகளின் ஆட்சியில் இருக்கிறது. முஸ்லிம் லீகர்களும் வங்காளிகள்தான்! ஆனால் எப்பேர்ப்பட்ட வங்காளிகள்?''

''டாக்டர் டாகூரும் வங்காளிதான். அவரைப் பாருங்களேன்! உலகமெல்லாம் ஒன்று, மனித ஜாதியெல்லாம் ஒரே ஜாதி என்று சொல்லவில்லையா? நீங்கள் வங்காளிகளைப் பற்றிக் குறை சொல்வது எனக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்கவில்லை. அதுவும் இந்த நாட்டில் நாம் தொழில் நடத்திப் பணம் சம்பாதித்துக் கொண்டே இந்த நாட்டு மக்களைப் பற்றிக் குறை சொல்லலாமா? போதும். புறப்படலாம்! ஹௌராவுக்குப் போக வேண்டும் என்றீர்களே!''— இவ்வாறு சொல்லிக் கொண்டே சித்ரா எழுந்தாள்.

''நான் இங்கே அதிக நாட்கள் இருப்பதாக உத்தேசமில்லை சித்ரா! சீக்கிரம் தமிழ் நாட்டுக்குப் போய்விட விரும்புகிறேன்'' என்று சொல்லிக் கொண்டு அமரநாத்தும் எழுந்தான்.

''அதெல்லாம் முடியாது! நீங்கள் போவதாயிருந்தால் தனியாகப் போக வேண்டியதுதான். உங்கள் நாட்டில் குடிகொண்டிருக்கும் சிறுமைப் புத்தியும் சின்னச் செயல்களும் எனக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. ஒருவரையொருவர் நிந்திப்பதே தமிழ் நாட்டாருக்கு வேலை. ஒரு ஸ்திரீயும் புருஷனும் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்தால் போதும். உடனே நூறு சந்தேகங்களைக் கற்பித்து அவதூறு பேச ஆரம்பித்து விடுவார்கள்!''

''வங்காளிகளிடம் இந்தக் குணம் கிடையாது என்று நினைக்கிறாய், சித்ரா! உனக்குத் தெரிந்த இலட்சணம் அவ்வளவுதான்!''

''எனக்குத் தெரிந்திருக்கிற அளவே போதும், பிறத்தியாரிடம் என்ன துர்க்குணம் இருக்கிறது என்று தோண்டிப் பார்த்துத் தெரிந்துகொள்ள எனக்குக் கொஞ்சமும் விருப்பமில்லை!''

இவ்வாறு முடிவில்லாத விவாதம் செய்து கொண்டே அந்த அன்யோன்ய தம்பதிகள் மோட்டார் வண்டி நிறுத்தியிருந்த இடத்துக்குச் சென்று வண்டியில் ஏறிக் கொண்டார்கள்.

அமரநாத்தும் சித்ராவும் கல்கத்தாவில் ஜாலிகஞ்ச் என்னும் பகுதியில் ஓர் அழகான பங்களாவில் வசித்தார்கள். முன்னேயெல்லாம் அவர்கள் அடிக்கடி ஏரிக் கரைக்குக் காற்று வாங்க வருவதுண்டு. பஞ்சத்தில் அடிபட்ட ஜனங்கள் கல்கத்தாவுக்கு வரத் தொடங்கிய நாளிலிருந்து அவர்கள் அதிகமாக வெளிக் கிளம்பவில்லை. தெருக்களில் பஞ்சத்தில் அடிபட்டுச் செத்துக் கிடந்தவர்களின் பிரேதங்களைப் பார்த்துக் கொண்டு போக அவர்களுக்குச் சகிக்கவில்லை. அதோடு பஞ்ச நிவாரண வேலையில் ஈடுபட்டிருந்த ஸ்தாபனம் ஒன்றில் சேர்ந்து சித்ராவும் தொண்டு செய்து கொண்டிருந்தாள். பர்மாவிலிருந்து வந்த அகதி ஸ்திரீகளுக்கும் குழந்தைகளுக்கும் உதவி புரிவதற்கென்று அந்த ஸ்தாபனம் முதலில் ஏற்பட்டது. அவ்வேலை ஒருவாறு முடிந்ததும் பஞ்சம் வந்து விட்டது. பஞ்சத்தில் அடிபட்டு மெலிந்தும் குற்றுயிராகவும் வந்த அநாதை ஸ்திரீகளுக்கும் குழந்தைகளுக்கும் இந்த ஸ்தாபனம் தொண்டு செய்து வந்தது.

இப்போது சில நாட்களாக அப்பஞ்ச நிவாரண வேலை குறைந்திருந்தபடியால் மூன்று மாதங்களுக்குப் பிறகு அமரநாத்தும் சித்ராவும் கொஞ்சம் ஏரிக் காற்று வாங்கிவிட்டு ஹௌரா நண்பர்களையும் பார்த்து வரலாம் என்று புறப்பட்டிருந்

டைரக்டர் **கே.பாலசந்தர்** எழுதும்

# மூன்று முடிச்சுக்கள்

**கல்கி** ஜனவரி 14 பொங்கல் மலரில் ஆரம்பம்

# உயர்தரமான சாலைகள் அமைய ஓர் உருப்படியான யோசனை



## ஏஸிஸி
## உயர்தர சிமெண்ட்

காண்க்ரீட் சாலைகளை அமைத்திட உதவுகிறது ஏஸிஸி சிமெண்ட். அச் சாலைகள்...

- பளுவான வண்டிச் சுமைகளைத் தாக்குப்பிடிக்கும்.
- ஓட்டுவதற்குப் பாதுகாப்பானவை, வசதிமிக்கவை.
- பகலும் இரவும் பார்க்கத் தெளிவாகக் காட்சிதரும்.
- எல்லாப் பருவங்களிலும் இடையறுப் பணிபுரியும்.
- பராமரிப்புத் தேவையே வெகு சொற்பம் எனவே, உன்னதமான சிக்கனம்.

**ACC**

தரத்தின் சிகரமான
தயாரிப்புகளுக்கு
நீங்கள் பெறும்
உத்தரவாதம்.

தி அஸோஸியேடெட்
ஸிமெண்ட் கம்பெனீஸ் லிட்.

தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கோ
ஆப் இந்தியா லிட்.

everest/209a/ACC TM

தார்கள். ஹௌரா ஸ்டேஷனிலிருந்து கொஞ்ச தூரத்தில் பெரிய பெரிய வியாபாரக் கம்பெனிகள் தொழில் நடத்திய வீதிகள் இருந்தன. அந்த விசாலமான வீதிகளில் நெருங்கியிருந்த ஜனக் கூட்டத்தையும் மோட்டார் முதலிய வாகனங்களின் நெருக்கத்தையும் சொல்லி முடியாது. மாலை நேரங்களில் நிமிஷத்துக்கு ஒரு கஜ தூரம் வீதம் ஊர்ந்து கொண்டுதான் அந்தப் பகுதிகளில் மோட்டார் செல்ல வேண்டும்.

''பஞ்சத்தில் அத்தனை லட்சம் பேர் செத்துப் போனார்கள், இத்தனை லட்சம் பேர் செத்துப் போனார்கள் என்று சொல்லுகிறார்களே! ' அவ்வளவு பேர் செத்துப் போன பிற்பாடும் இங்கே இத்தனை கூட்டமாக இருக்கிறதே ?'' என்றான் அமரநாத்.

''இருந்து விட்டுப் போகட்டும்; நீங்கள் யார் பேரிலாவது வண்டியை ஏற்றி ஜனத்தொகையைக் குறைக்கும் கைங்கரியத்தைச் செய்ய வேண்டாம்!'' என்றாள் சித்ரா.

''இந்த வீதியில் யார் பேரிலாவது வண்டியை ஏற்றினால் அவன் அநேகமாக அரிசியை முடக்கிய கறுப்பு மார்க்கெட் முதலாளியாக இருப்பான். அவனைக் கொன்றால் தேசத்துக்குப் பெரிய சேவை செய்தவனாவேன்!'' என்று சொன்னான் அமரநாத்.

## 24. வெடித்த எரிமலை

மாலைப் பொழுது இரவாக மாறிக் கொண்டிருந்தது. சாலை ஓரத்துக் கம்பங்களில் தீபங்கள் ஏற்றப்பட்டன. ஆனால் விளக்குகள் எல்லாவற்றுக்கும் ஏ. ஆர். பி. கூண்டுகள் போட்டிருந்தபடியால் தீபங்கள் பிரகாசமாக எரியவில்லை.

''இந்த ஜப்பான் யுத்தம் வந்தாலும் வந்தது; கல்கத்தாவின் சோபையே போய் விட்டது! முன்னேயெல்லாம் இந்த இடத்தில் எப்படிப் பிரகாசமான விளக்குப் போட்டு ஜகஜ்ஜோதியாக இருக்கும்!'' என்றாள் சித்ரா.

இப்படி அவள் சொல்லி வாயை மூடினாளோ இல்லையோ, எட்டுத் திக்கும் திடுக்கிடும்படியாகப் படார், படார் என்று சத்தம் கேட்டது. உடனே ஏ. ஆர். பி. ஸைரன் உடம்பு சிலிர்க்கும்படி சோக சத்தத்துடன் ஊளையிடத் தொடங்கியது. ஜப்பான் விமானம் வந்து குண்டு போடுகிறதென்றும், ஏ. ஆர். பி. ஸைரன் முன் எச்சரிக்கை செய்வதற்குப் பதிலாகப் பின் எச்சரிக்கை செய்கிறதென்றும் அமரநாத்தும் சித்ராவும் தெரிந்து கொண்டார்கள். இது அவர்களுக்குப் புதிய அனுபவமாதலால் அவர்களுடைய உடம்பு நடுங்கிற்று. நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. சித்ரா அமரநாத்தின் தோள்களைப் பிடித்துக் கொண்டாள். அமரநாத் சாலையோரத்தில் வண்டியை நிறுத்தினான். வீதியில் எள் விழவும் இடமில்லாதபடி நெருங்கி நின்றுகொண்டிருந்த ஜனங்கள் நாலாபுறமும் சிதறி ஓடி மறைந்தார்கள். வண்டிகள் மட்டும் அப்படி அப்படியே சாலை ஓரமாக நின்று கொண்டிருந்தன.

குண்டுகளின் சத்தம் ஓய்ந்து ஐந்து நிமிஷம் ஆயிற்று. ''சரி; இவ்வளவுதான் போலிருக்கிறது; இனிமேல் போகலாம்'' என்ற எண்ணம் அவர்கள் மனத்திலே தோன்றியது. அடுத்த கணத்தில் ஆகா! இது என்ன அதிசயமான வெளிச்சம்! ஆயிரம் கோடி சூரியன் பூமியை நோக்கி விரைந்து வருவது போன்ற வெளிச்சம்! உடனே அந்த அதிசயமான வெளிச்சம் மங்குகிறது! — ஒரு பெரிய சத்தம், — அண்டங்கள் வெடித்து விழுவதுபோன்ற பயங்கரமான சத்தம் — கேட்கிறது. காது செவிடாகி விட்டதென்றே தோன்றுகிறது. மோட்டார் கிடுகிடுவென்று நடுங்குகிறது. மோட்டாரின் கண்ணாடிக் கதவுகள் சடசடவென்று விரிந்து உடைகின்றன. சுற்றுப்புறமெங்கும் மக்கள் ஓலமிடும் பயங்கரமான சத்தம் எழுகின்றது.

பயங்கரம் இத்துடன் முடிந்து போய் விடவில்லை. சற்றுத் தூரத்தில் ஒரு பெரும் புகைத் திரள் குப்குப் என்று கிளம்பிப் பரவி வானை மறைக்கிறது. புகைத் திரளுக்கு மத்தியிலிருந்து ஒரு செந்தீப் பிழம்பு வானை நோக்கி ஜ்வாலை விட்டுக் கொண்டு மேலே மேலே போய் வானத்தையே மூடிவிடும் போலத் தோன்றுகிறது.

இத்தனை நேரமும் அமரநாத்தைச் சித்ரா கெட்டியாகப் பிடித்துக் கொண்டபடி இருந்தாள். இப்போது வாயைத் திறந்து நடுநடுங்கிய மெல்லிய குரலில், ''ஐயோ! இது என்ன? இவ்வளவு பெரிய நெருப்பு எங்கிருந்து கிளம்புகிறது ?'' என்றாள்.

'' எனக்கும் இப்போதுதான் தெரிகிறது. டி. என். டி. வெடிமருந்துக் கிடங்கில் தீப்பிடித்திருக்க வேண்டும். அது










தான் இவ்வளவு பெரிய சத்தம் கேட்டது!'' என்றான் அமரநாத்.

''உலகத்துக்கு ஏதோ கேடுகாலம் வந்து விட்டது; சந்தேகம் இல்லை'' என்றாள் சித்ரா.

''உலகத்துக்கு கேடுகாலம் முன்னமே வந்துவிட்டது; இப்போதுதான் கல்கத்தாவுக்குக் கேடு வந்திருக்கிறது!'' என்றான் அமரநாத்.

''நாம் சிவனே என்று மதராஸுக்குப் போய்விடலாம், கல்கத்தாவில் இத்தனை நாட்கள் இருந்தது போதும்!'' என்றாள் சித்ரா.

''முதலில் இன்று இராத்திரி வீடு போய்ச் சேரலாம். நாளைக்கு மதராஸுக்குப் போவதுபற்றி யோசிக்கலாம்'' என்றான் அமரநாத்.

'' வண்டியைத் திருப்பி வீட்டுக்கு விடுங்கள்! ஹௌராவுக்கு இன்றைக்கு வேண்டாம்!'' என்றாள் சித்ரா.

''கொஞ்சம் என் கை நடுக்கம் நிற்கட்டும். அதற்காகத்தான் காத்துக் கொண்டிருக்கிறேன். ஹௌராவுக்குப் போக நினைத்தாலும் இன்றைக்கு முடியாது!'' என்றான் அமரநாத்.

அமரநாத் கூறியது உண்மை என்பதை எதிரிலே தோன்றிய காட்சிகளும் சுற்றுப்புறமெங்கும் கேட்ட சத்தங்களும் உறுதிப்படுத்தின.

முதலில் கிளம்பிய பெரும் நெருப்பு மேலும் மேலும் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது.

அதற்குச் சமீபத்தில் அங்குமிங்கும் இன்னும் சிற்சில சிறிய தீப்பிழம்புகள் தோன்றலாயின.

திரள் திரளாகக் கரிய புகை கிளம்பிச் சுழன்று பரவி வானவெளியையெல்லாம் மூடியது.

தீப்பிடித்த இடங்களை நோக்கி ஜனங்கள் பலர் பயங்கரமான கனைச் சத்தங்களை இட்டுக் கொண்டு விரைந்து ஓடினார்கள்.

நாலா பக்கங்களிலிருந்தும் டாண் டாண் என்று மிக்க வேகமாக மணி அடித்துக் கொண்டு நெருப்பு அணைக்கும் என்ஜின்கள் பறந்து ஓடி வந்து கொண்டிருந்தன.

சிறிது நேரம் ஆங்காங்கே ஸ்தம்பித்து நின்று கொண்டிருந்த மோட்டார் வண்டிகள் திடீரென்று ஏககாலத்தில் புறப்பட யத்தனித்தபோது அவற்றின் ஹாரன்கள் எழுப்பிய சத்தங்க்ள், மகா கோரமாகக் காது செவிடுபடக் கேட்டன.

வானை மூடியிருந்த புகைத் திரள் காற்றின் வேகத்தினால் கொஞ்சம் விலகிக் கொடுத்துத் தீயின் வெளிச்சம்

கட்டடங்களின் மேலே விழும்படி செய்த போது, வீதியின் இருபுறமும் இருந்த நாலு மெத்தை ஐந்து மெத்தைக் கட்டடங்களின் மேல் தளங்களில் ஜனங்கள் நிழல் உருவங்களாக நின்று பார்த்துக் கொண்டிருந்த காட்சி, பயங்கரமான யமலோகக் காட்சியை நினைவூட்டியது.

சித்ரா அதையெல்லாம் பார்க்கச் சகியாமல் கண்களை மூடிக் கொண்டாள். பிறகு கேட்கச் சகியாமல் காதுகளைப் பொத்திக் கொண்டாள். ''வண்டியைத் திருப்பி ஓட்டப் போகிறீர்களா, இல்லையா?'' என்றாள்.

''ஓட்டுகிறேன்! நீயும் கொஞ்சம் ஜாக்கிரதையாக முன்னும் பக்கங்களிலும் பார்த்துக் கொண்டு வா!'' என்றான் அமரநாத்.

கார் திரும்பிப் புறப்பட்டு அந்த வீதியைத் தாண்டி அடுத்த வீதியில் நுழைந்தது. அங்கே கொஞ்ச தூரத்துக்கு அப்பால் ஒரு பெரிய ஜனக் கூட்டம். அருகில் நெருங்கிப் பார்த்தபோது ஒரு மார்வாரியின் கடைக்குள் ஜனங்கள் புகுந்து கிடைத்த சாமான்களைச் சுருட்டிக் கொண்டு ஓடுவதாகத் தெரிய வந்தது.

கூட்டத்தின் மத்தியில் சில போலீஸ்காரர்களும் காணப்பட்டார்கள். ஜனங்கள் கடையில் புகுந்து சூறையாடுவதை அந்தப் போலீஸ்காரர்கள் பார்த்துக் கொண்டு நின்றார்கள்.

ஜனக் கூட்டத்தின் ஓரம் வரையில் அமரநாத் காரைக் கொண்டுவந்து விட்டுப் பிறகு சிறிது தயங்கினான். மறுபடியும் காரைத் திருப்பிவிடலாமா என்று நினைத்தான். திரும்பிப் போவதற்கு வேறு நல்ல வழி கிடையாது. ரொம்பவும் சுற்றி அலைய வேண்டும்.

மேலும் இந்தக் காலிக் கூட்டத்துக்குப் பயந்து திரும்பிப் போவதா? — வீதி ஓரமாகக் கூட்டத்துக்குள்ளே அமரநாத் காரை விட்டான். கூட்டத்தில் சிலர் காரின் மேல் தட்டைத் தட்டினார்கள். சிலர் கதவைத் தட்டினார்கள். சிலர் பின்னால் நின்று வண்டியைப் பிடித்து இழுத்து நிறுத்தப் பார்த்தார்கள். சிலர் 'ஆய் ஊய்' என்று கத்தினார்கள். 'மாரோ! மாரோ!' என்று ஒரு குரல் கேட்டது.

அமரநாத் கதிகலக்கத்துடன்தான் வண்டியை ஓட்டினான். நல்ல வேளையாக அபாயம் ஒன்றும் நேரவில்லை. கூட்டத்தைத் தாண்டியதும் வேகமாக வண்டியை விட்டான்.

''சித்ரா! பார்த்தாயல்லவா இலட்சணத்தை! எங்கேயோ குண்டு வெடித்தது! எங்கேயோ தீப்பிடித்தது! இங்கே



''ஆல் இண்டியா ரேடியோ... ஒரு முக்கிய அறிவிப்பு! எதிர்பாராத சில காரணங்களால் ஒரு முக்கிய அறிவிப்பை ஒலிபரப்ப முடியாமல் போனதற்கு வருந்துகிறோம்!... இதுவரை ஒரு முக்கிய அறிவிப்பு கேட்டீர்கள்! இனி.....''

கடையிலே புகுந்து காலிகள் கொள்ளையடிக்கிறார்கள்! இந்த லட்சணத்தில் இந்தியாவுக்குச் சுயராஜ்யம் வேண்டுமாம், சுயராஜ்யம்! உருப்பட்டாற் போலத்தான்!'' என்றான் அமரநாத்.

இப்படி அமரநாத் சொல்லிக்கொண்டிருக்கும் போது காரின் மேல் ஒரு கல் வந்து விழுந்தது. ஓடும் வண்டியில் விழுந்தபடியால் வெடிகுண்டு வெடித்தது போலச் சத்தம் கேட்டது.

''நான் சொன்னது சரியாகப் போய் விட்டதல்லவா? இந்தக் கல் என் பேரிலோ எதிர்க்கண்ணாடியின் பேரிலோ விழுந்திருந்தால் என்ன கதி ஆகியிருக்கும்?'' என்றான் அமரநாத்.

''நான்தான் சொல்லி விட்டேனே? இந்தக் கல்கத்தாவிலே இருந்ததும் போதும்; சம்பாதித்ததும் போதும்; நாளைக்கே ஊருக்குப் புறப்படலாம். உள்ளதைக் கொண்டு நிம்மதியாயிருக்கலாம்.''

''ஊருக்குப் போனால் நிம்மதி வந்துவிடுமா? அங்கேயும் இந்த மாதிரியான ஜனங்கள்தானே இருப்பார்கள்? இங்கே செய்வதைப் போல் அங்கேயும் செய்ய மாட்டார்களா?''

''நம்ம பக்கத்து ஜனங்கள் ஒரு நாளும் இந்தமாதிரி மிருகப் பிராயமாக நடந்து கொள்ள மாட்டார்கள்!'' என்று தீர்மானமாகக் கூறினாள் சித்ரா.

கொஞ்ச தூரம் போனதும் ஒரு மோட்டார் பஸ் சாலை ஓரத்தில் பக்க

வாட்டில் விழுந்து தீப்பிடித்து எரிந்து கொண்டிருப்பதைக் கண்டார்கள்.

''பஸ்ஸில் எப்படித் தீப் பிடிக்கும்?'' என்றாள் சித்ரா.

''தானாகப் பிடித்திராது! யாரோ காலிகள் தீ வைத்திருக்கிறார்கள்!'' என்றான் அமரநாத்.

''எதற்காக?''

''எதற்காக என்று கேட்டால் நான் என்ன சொல்வது? காலிகளுடைய காரியங்களுக்குக் காரணம் சொல்ல முடியுமா? கொள்ளை, கொலை, தீ வைத்தல் ஆகிய காரியங்களிலேயே அவர்களுக்கு ஆனந்தம்! நிஷ்காம்ய கர்மமாகவே செய்வார்கள்!''

வண்டி இன்னும் கொஞ்ச தூரம் சென்றதும் சாலை ஓரத்தில் ஓர் உருவம் விழுந்து கிடப்பது தெரிந்தது. அது பெண் உருவமாகவும் காணப்பட்டது. அதன் பக்கத்தில் ஒரு பையன் குனிந்து நின்று கொண்டிருந்தான்.

''நிறுத்துங்கள்! வண்டியை நிறுத்துங்கள்!'' என்று சித்ரா கூவினாள்.

வண்டி நின்றது. அதைப் பார்த்ததும் பெண் உருவத்தின் பக்கத்தில் நின்ற பையன் விழுந்தடித்து ஓடினான்.

''அந்தப் பையன் என்ன செய்து கொண்டிருந்தான்?'' என்று சித்ரா கேட்டாள்.

''கையிலிருந்த வளையலைக் கழற்றிக் கொண்டிருந்தான். நம்மைப் பார்த்ததும் ஓடினான்! சித்ரா! கொஞ்ச நாட்களாகக் கல்கத்தா சாலைகளில் பிரேதங்களைக் காண்பதில்லையென்று குறைப்பட்டாயல்லவா? இதோ உன் குறை தீர்ந்துவிட்டது!''

''ஏதாவது கன்னா பின்னாவென்று சொல்லாதீர்கள்! நான் பிரேதத்தைக் காணவில்லை என்று குறைப்பட்டேனாக்கும்! ஒருவேளை இன்னும் உயிர் இருக்கிறதோ, என்னமோ? இறங்கிப் பார்க்கலாம். வாருங்கள்'' என்றாள் சித்ரா.

இருவரும் இறங்கி அந்த உருவத்தின் அருகில் போனார்கள்.

''அடாடா! மதராஸ் பக்கத்துப் பெண் போல அல்லவா இருக்கிறது? வயதும் அதிகமிராது; சிறு பெண்!'' என்றாள் சித்ரா.

''மதராஸ் பெண் என்பதற்காக யமன் விட்டுவிடுவானா, என்ன? பார்த்தாகிவிட்டது! வா, போகலாம்'' என்றான் அமரநாத்.

''செத்துப் போய்விட்டதாக அவ்வளவு நிச்சயமாக ஏன் சொல்ல வேண்டும்? உயிர் இருக்கிறதா என்று பாருங்கள்!''

''நீயே பார்! உனக்குத்தான் இந்த மாதிரிக் காரியங்களில் அநுபவம் அதிகம்!'' என்றான் அமரநாத்.

கீழே கிடந்த பெண்ணின் மூக்கின் அருகே சித்ரா விரலை வைத்துப் பார்த்தாள். மூச்சு இலேசாக வந்துகொண்டிருந்தது. மார்பில் கையை வைத்துப் பார்த்தாள். மார்பு அடித்துக் கொண்டது என்பதும் நன்கு தெரிந்தது.

''நிச்சயமாக உயிர் இருக்கிறது! சீக்கிரம் பிடியுங்கள்!'' என்று சொல்லிச் சித்ரா அந்தப் பிரக்ஞையற்ற பெண்ணின் தலையின் கீழ்க் கையைக் கொடுத்துத் தூக்கினாள்.

''ஏன் மரம் மாதிரி நிற்கிறீர்கள்! சீக்கிரம் காலின் பக்கம் பிடித்துத் தூக்குங்கள்'' என்றாள்.

''யாரோ தெருவில் கிடக்கிறவளுக்காக நான் 'மரம்' என்று வசவு வாங்க வேண்டியிருக்கிறது! அவளுடைய காலையும் பிடித்துத் தொலைக்க வேண்டியிருக்கிறது!'' என்று சொல்லிக்கொண்டே அமரநாத் அந்தப் பெண்ணின் காலைப் பிடித்துத் தூக்கினான். இருவருமாகக் கொண்டு வந்து காரின் பின்ஸீட்டில் போட்டார்கள்.

''விடுங்கள்! சீக்கிரம் காரை விடுங்கள். ஓர் உயிரைக் காப்பாற்றுங்கள்!'' என்றாள் சித்ரா.

வண்டி கிளம்பிப் போகத் தொடங்கியதும், ''எங்கே விடுகிறது! காரை எங்கே விடுகிறது?'' என்று அமரநாத் கேட்டான். ''வீட்டுக்குத்தான் விட வேண்டும்! வேறு எங்கே?''

''அப்படியானால் நான் வண்டியை நிறுத்தி வெளியில் எடுத்து எறிந்துவிடுவேன். வீட்டுக்குக் கொண்டு போகவே கூடாது. யாரோ? என்ன சங்கடமோ? நம் வீட்டில் செத்து வைத்தால் என்ன செய்கிறது?'' என்றான் அமரநாத்.

''உங்களைப் போல் இரக்கமற்ற மனிதரை நான் பார்த்ததே கிடையாது. அப்படியானால், அநாதை விடுதிக்கு விடுங்கள்! சீக்கிரம் போனால் சரி!'' என்றாள் சித்ரா.

அமரநாத் அதிவேகமாகக் காரை விட்டுக் கொண்டு சென்றான். பிரக்ஞையற்றுக் கிடந்த பெண்ணின் முகத்தில் வேகமாகக் காற்றுப் பட்டதினாலேயே அவளுக்கு உயிரும் உணர்வும் வரத் தொடங்கின. அநாதை ஆசிரமத்துக்குக் கொண்டு போய்ச் சிறிது நேரம் ஆரம்ப சிகிச்சை செய்ததும் நன்றாக உயிர் வந்துவிட்டது. இனி அபாயம் இல்லையென்று தெரிந்து கொண்ட பிறகு, அமரநாத்தும் சித்ராவும் வீடு போய்ச் சேர்ந்தார்கள்.

(தொடரும்)


SWASTIK
PERFUMED
CASTOR OIL

# ராஜாஜியின் ஜெயில் டைரி

நாகரிகமான மக்களை வரவேற்கத் தயாராவது போல, ஆந்திர நண்பர்களிடமிருந்து நான் க்ஷவரக் கத்தியை வாங்கி, அந்த மொட்டைக் கத்தியைக் கொண்டு கஷ்டப்பட்டு முகத்தை வழ வழவென்று க்ஷவரம் செய்து வைத்துக் கொண்டிருக்கிறேன். சிறையில் நாவிதர்கள் இருக்கவே செய்கிறார்கள். ஆனால் அவர்களைக் கண்டால் பயமாயிருக்கிறது. அவர்களைப் போலொத்த யமகிங்கரரை ஒரே ஒரு தடவைதான் சேலத்தில் பார்த்திருக்கிறேன். நல்ல நாவிதர்கள் ஏன் சிறைக்கு வரப் போகிறார்கள்? அவர்கள் சிறைக்கு வராதிருப்பதற்குத் தகுந்தவண்ணம் யோக்கியர்களாக இருப்பார்கள். அல்லது அகப்பட்டுக் கொள்ளாதிருப்பதற்குத் தகுந்த சாமர்த்தியம் உடையவர்களாயிருப்பார்கள்.

சிறைக்கு வெளியே எவ்வளவு கேவலமாகச் சமைப்பாரோ, அவ்வளவு கேவலமாகச் சிறைக்குள்ளேயும் பிராம்மண சமையல்காரர் சமைக்கிறார். தூசு, துரும்பு, கல், மண் முதலிய பொருள்களைக் காணும் விஷயத்திலும் பயங்கரமான சுவையிலும் இவர் சமைக்கும் சோறுக்கும் குழம்புக்கும் ஈடு இணையே கிடையாது. அவர் என்ன செய்வார்? அரிசியும், காய்கறியும் அந்த லட்சணத்தில் கொடுக்கிறார்கள். சீக்கிய நண்பர்களுக்கு அவர்களில் ஒருவரான நிதான் சிங்கே சமைக்கிறார். அவருக்கு உதவி செய்ய ஒருவரும் கிடையாது. ஆனால் அவரே போய் ரேஷனை வாங்கி வருவதால் யாரும் அதில் இருட்டு நடத்த முடியாது. அவர் மனமுவந்து செய்வதால் அவருடைய சமையல் சுத்தமாகவும் சுவையாகவும் இருக்கிறது. சர்க்காரைக் கவிழ்க்கச் சதியாலோசனை செய்து அதற்காக 'அந்தமான் தண்டனை' பெற்று வந்துள்ள திருடன், பாவம், அப்பாவிப் பிராமணக் கைதியான சமையல்காரரை ஒப்பிட்டுப் பார்க்கலாமா?

நிதான் சிங் தினந்தோறும் காலையில் இரண்டு சப்பாத்திகளும் மத்தியானத்தில் கொஞ்சம் பருப்பும் எனக்குக் கொண்டு வந்து தருகிறார். வரும் பொழுதெல்லாம், 'வந்தே மாதரம்' என்று சொல்லிக் கொண்டே வருவார். நான் அதைக் கேட்டதும் சில வேளைகளில், 'ராம், ராம்' என்றும், சில வேளைகளில் வந்தே மாதரம் என்றும் கூறுகிறேன். அவர் பேசும்போது ஒன்றிரண்டு ஆங்கில வார்த்தைகளே புரிகின்றன.

அவருடைய வீர உள்ளம் என்ன கூறுகிறதோ, அதையெல்லாம் என்னால் அறிய முடியவில்லை. ஆயினும் அதிகச் சிரமப்பட்டு ஒன்று மட்டும் அறிந்து கொண்டேன். ஆங்கிலத்தில், ''பணம் செலுத்துதல்'' என்பதற்கு உபயோகிக்கும் செலுத்துதல் என்ற பதத்தையே அவர் ''கொடுத்தல்'' என்பதற்கும் உபயோகிக்கிறார்! ''நான் பருப்பு செலுத்துகிறேன், நான் சப்பாத்தி செலுத்துகிறேன். அதிகாரி ரேஷன் செலுத்துகிறார், அவர் கடிதம் செலுத்துகிறார்'' என்று இவ்வாறு கூறுவதாக எண்ணுகிறேன். அவருக்கு ஆங்கிலம் தெரியாது. ஆயினும் உண்மையும் வீரமும் நிறைந்தவர். அந்த மாதிரி வாழ எல்லாரும் கற்று விட்டால் அப்புறம் இந்தியா சுதந்திரம் அடைவதிலும் வாழ்வு இன்பமயமாக இருப்பதிலும் சந்தேகமே இல்லை.

சரி, இப்பொழுது சிறிது நேரம் நூல் நூற்கப் போகிறேன். இங்கே உள்ள இந்த ராட்டினம் எனக்குத் தம்பி மாதிரியாகவே ஆகிவிட்டது. அதனிடம் எனக்கு உண்டாயிருக்கும் அன்பைக் காந்தியடிகள் அறிவாரோ என்னவோ? அவர் மட்டும் கண்டாரானால் அவருக்கு எவ்வளவு மகிழ்ச்சி உண்டாகும்?

## 1922 ஜனவரி, 16உ

இன்று திங்கட்கிழமை. காலையில் சிறையின் அதிகாரி வழக்கம்போல் கைதிகளைப் பார்வையிட்டார். அவர் வந்து போனதும் சீக்கியக் கைதிகளிடையே கட்டுப்பாடு குலைந்தது எப்படியோ தெரியவில்லை. காவல்காரர்கள் கைவிலங்குகள் கொண்டு வந்து சீக்கியர் இருவர் கையில் மாட்டி, வேறு சிறைப் பகுதிக்கு அழைத்துப் போனார்கள்.



நேற்று இரவும் ஆஸ்துமா தொல்லேயே தந்தது. இனிமேல் மத்தியானச் சாப்பாட்டில்கூடப் பருப்பு சேர்த்துக் கொள்ளக் கூடாது என்று எண்ணுகிறேன். இன்று காலேயில் சிறை அதிகாரி வந்திருந்த பொழுது அவரிடம், 'சோறும் பருப்பும் தருவதற்குப் பதிலாகப் பாலும் ரொட்டியும் தர முடியுமா?' என்று கேட்டேன். 'ஆகட்டும்' என்று பதில் கூறினர்.

லாலா லஜபத்ராய் அவர்கள் விடுதலே பெற்றுவிட்டதாக அறிகின்றேன். இதனல் நன்மை விளேயுமோ தீமை விளேயுமோ தெரியவில்லே. பஞ்சாப் மக்களிடையே மனேதைரியம் இதனல் குன்றிப் போகுமோ போகாதோ, அதைக் குறித்து இவ்வளவு தூரத்திலிருந்து கொண்டு எப்படிக் கூறுவது?

சென்னே நகரத்தில் ஹர்த்தால் நடந்ததன் பலன் இப்பொழுது ஏற்பட ஆரம்பித்திருக்கிறது. முப்பது பேரைக் கைது செய்திருக்கிருர்கள். பெரிய மனிதர்கள் என்று சொல்லக் கூடியவர்களே அல்ல. ஹர்த்தால் நடந்த தினத்தில் ஜனங்கள் கூட்டமாகப் போய்த் தியாகராயச் செட்டியார் வீட்டை வளேத்துக் கொண்டது உண்மை என்றே தெரிகிறது.

சென்னேச் சட்டசபையில் என்னேப் பற்றி ஏதோ கேள்வி கேட்கப்பட்டதாகச் சொல்கிருர்கள். அது உண்மையோ என்னவோ எனக்குத் தெரியாது. எனக்குச் சௌகரியங்கள் செய்து கொடுக்கவோ அல்லது முன் கூட்டி விடுதலே அளிக்கவோ எவ்வித முயற்சிகளும் செய்யப்படாமல் இருக்க வேண்டும் என்றே விரும்புகிறேன். முன் கூட்டி விடுதலே பெற்று வெளியேறுவேனேயாளுல் இங்கு வந்ததெல்லாம் வியர்த்தமாகவே போகும்.

# புதுத் திருப்பாவை



ஓங்குந் திருமாலின் ஒல்காப் புகழ்பாடி;
நீங்கா திருப்பவனே ஒன்றி நினேத்தேநாம்,
மார்கழியில் நீராட, மண்டும் மழைவளமும்
நீர்வயலும் ஆவினமும் நேர்.

வளம்பெருக மண்ணில் நலம்பெருக மக்கள்
குலம்பிழைக்க என்றும் குளிர்மழையைப் பெய்வாய்
நலங்களுக்கு மன்னு மணிவண்ணு கண்ணு
நலங்குநீ ராடநாங் கள்.

ஆயர் குலத்தழகன் அன்னே யசோதைவளர்
மாயவன் ஏடியவன் மாண்பில் திளேத்துவிட்டால்
உண்டோ ஒருகுறை? சங்கோசை கேட்கலேயோ?
இன்னுமோ தூக்கம் எழு.

பெண்ணே குளிர்ப்புனலில் மேனி முழுகாமல்
என்னே துயிலடியோ? வெள்ளிக் கிழமையிலே?
சங்குசக்க ரத்தோனேக் கூடும் சமயமோ
இங்குநீ கண்டாய் தனித்து?



திருப்பள்ளி கொண்டோனே தீந்தமிழால் பாட
திருஎழுச்சி கொள்வோனே நப்பின்னே தேவா!
மறைஞானப் பேரொளியே மாணடிகள் சேர்ந்தோம்
குறைதீர்க்க நோக்காயோ சற்று.

முன்னேத் திறம்வியந்து மூழ்கி புனேயேத்தி
நின்னே அனுபவிக்க வந்தோம் நெடுமாலே!
என்றுமிந் நோன்பை இயற்றுதற் கெம்மைநீ
நன்றனிசெய் என்றேம் நயந்து.

மாதவனே நின்னருள் பெற்று மகிழ்வதொன்றே
வேதமும் நாதமும் வேய்ங்குழல் கீதமுமாம்;
எம்மை எழுமைக்கும் உம்அடிமை ஆக்கினேம்;
அம்புதனே ஆட்கொண் டருள். — தெசிணி

# எல்லோரும் என்னை குட்டி பயில்வான் என்கிறார்கள்

என்கிறான் 6 மாதம் நிறைந்த அம்ரித். அவனது உடலையும் எடையையும் பார்ப்பவர்கள் அவன் வயது இன்னும் அதிக மிருக்கும் என்று நினைக்கிறார்கள். இந்த அமோக வளர்ச்சிக்குக் காரணம், அமுல்ஸ்ப்ரே.



ஆரோக்கியத்தின் இரகசியத்தை என்னிடம் கேளுங்கள்.





என் கால் விரல்களை எப்படித் தொடுகிறேன், பாருங்கள்.

அமுல்ஸ்ப்ரே, வியக்கும்படியான குறுகிய காலத்துக்குள் மக்களின் நம்பிக்கையைப் பெற்றுவிட்டது. அறிமுகப்படுத்திய இரண்டே ஆண்டுகளுக்குள், அமுல்ஸ்ப்ரே, இந்தியாவில் விற்பனையாகும் குழந்தை உணவுகளுள் உச்ச விற்பனையை எய்திவிட்டது.

உங்கள் குழந்தைக்கு, பிறந்த முதல் வாரத்திலிருந்தே அமுல்ஸ்ப்ரே தரலாம். அமுல்ஸ்ப்ரே எளிதில் சீரணிக்கக் கூடியது; சரிவிகித ஊட்டச் சத்துக்கள் நிறைந்தது; அவசியமான வைட்டமின்கள், தாதுப் பொருள்கள் மற்றும் சீரான வளர்ச்சிக்காக அதிக அளவிலே தாமுயர்ந்த புரதச் சத்துக்கள் கொண்டது.




## அமுல்ஸ்ப்ரே

தாய்ப்பாலுக்குப் பதிலாகப் புகட்டச் சிறந்தது

ASP/AS-21

# அம்மாவுக்கு ஜுரம்

எஸ்.வி.வி.

''ந மே துக்கம் ப்ரியா தூரே
ந மே துக்கம் ஹ்ருதேதி வா
ஏததேவாநுசோசாமி
வயோஸ்யாஹ் யதிவர்ததே''

என்று ஸ்ரீ ராமன் சீதையை இழந்திருந்த காலத்தில் துக்கப்பட்டதாக வால்மீகி எழுதுகிறார். அதாவது ''சீதை வெகு தூரத்தில் இருக்கிறாளே என்று நான் துக்கப்படவில்லை; அவளை ஒருவன் தூக்கிக் கொண்டு போய்விட்டானே என்றும் நான் துக்கப்படவில்லை; (அவளை மீட்டுக் கொண்டு வருவதும் எனக்கு ஒரு பெருத்த காரியமல்ல) நான் துக்கப்படுவதெல்லாம் ஒன்றுக்குத்தான். அவளுக்கு (நாளுக்கு நாள்) வயதல்லவா அதிகரித்துக் கொண்டு போகிறது?'' என்று சோகித்தாராம். ஸ்ரீராமன் அம்மாதிரி சோகித்ததில் என்ன ஆச்சரியம்? 'மானவன் மானுஷத்வம்' என்று ஈசுவரன் மனுஷ்யனாக நடித்த காலத்தில் இம்மாதிரியான யௌவன அவஸ்தைகள் அவருக்கு எப்படி இல்லாமல் இருக்கும்? அதில் வேறு தத்துவார்த்தமும் உண்டு.

கர தூஷணர்களை வதம் செய்து விட்டு, மயிர்க்காலுக்கு மயிர்க்கால் அம்புகள் தைத்த ரண காயங்களுடன் திரும்பி வருகிறார் ஸ்ரீராமர்.

''தம் த்ருஷ்ட்வாசத்ருஹந்தாரம்
மஹர்ஷீணாம் ஸுகாவஹம்
பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ
பர்த்தாரம் பரிஷஸ்வஜே''

என்றார் வால்மீகி.

அப்படி ரண காயங்களுடன் வந்த ஸ்ரீராமனைச் சீதை சேர்த்து ஆலிங்கனம் செய்து கொண்டாளாம். உடம்பிலிருந்த ரண காயங்களெல்லாம் எங்கோ பறந்து போய்விட்டனவாம்! அது யௌவனத்தின் மனப்பான்மை.

ஸ்ரீராமனும் சீதையும் கோதாவரி நதிக் கரையை அடைந்த காலத்தில் கோதாவரி நதியைக் கம்பர் வர்ணிக்கிறார். பிரதானமாகச் சொல்ல வந்தது கோதாவரி வர்ணனை. அதில் அந்நதிக்கு முன்னின்று பார்த்து அநுபவிக்கும் ஸ்ரீராமன், சீதை இவர்களுடைய மனப்போக்கையும் சாதுரியமாய்ப் புகுத்தி அந் நதியைப் பிரகாசிப்பிக்கிறார்.

''ஓதிமம் ஒதுங்கக் கண்ட
உத்தமன் உழைய ளாகும்
சீதைதன் நடையை நோக்கிச்
சிறியதோர் முறுவல் பூத்தான்
மாதவள் தானு மாண்டு
வந்துறீ ருண்டு மீளும்
போதகம் நடப்ப நோக்கிப்
புதியதோர் முறுவல் பூத்தாள்.''

சுத்தமான கோதாவரியின் ஜலத்தில் அன்னங்கள் வெகு அழகாக நீந்திப் போவதைக் கண்ட ஸ்ரீராமன், ''அடே! சீதை நடக்கிற மாதிரியே இந்த அன்னங்களும் நடக்க முயல்கின்றனவே!'' என்று ஹாஸ்யப் புன்சிரிப்பு சிரித்தாராம். அந்நதியில் யானைகள் நீர் அருந்திவிட்டுத் 'தம் தம்' என்று கம்பீரமாக நடந்து போவதைச் சீதை பார்த்து, ''ஆகா! ராமன் கம்பீரமாக நடப்பதைப் போலவே இந்த யானைகளும் நடக்கப் பார்க்கின்றனவே!'' என்று புன்முறுவல் பூத்தாளாம்.



□ இன்றையத் தமிழ் இலக்கியத்துக்கு வளம் கூட்டியவர்களிலே காலஞ்சென்ற எஸ். வி. வி. அவர்களுக்குத் தனி இடம் உண்டு. குடும்ப வாழ்க்கையிலே நிகழும் சம்பவங்களை ஹாஸ்யமாகச் சித்திரிப்பதில் வல்லுநர் எஸ். வி. வி. யதார்த்தவாதத்தை அழகுறச் சமைக்கும் ஆதர்சவாதி. 'அம்மாவுக்கு ஜுரத்'தில் அழகான காதல் உணர்வைக் கலந்து இயல்பான ஹாஸ்யத்தை உதிர்த்து அருஞ்சுவை விருந்து படைக்கிறார். □

கோதாவரியின் அழகைப் பார்த்தபொழுது ராமனுக்கும் சீதைக்கும் இம்மாதிரியான யோசனைகள் தோன்றுவானேன்? அது யௌவனப் பருவத்தின் சேஷ்டை. லோக ரக்ஷகனும் ஜகன்மாதாவுமான ராமன், சீதை இவர்களுக்கே இப்படி இருக்குமாயின், நமது பஞ்சாமியைப் பற்றிக் கேட்பானேன்?

பஞ்சாமி ஒரே மோகத்தில் மூழ்கிக் கிடந்தான். அவனுக்குச் சாந்திக் கல்யாணம் ஆகி ஐந்தாறு மாதங்கள்தான் ஆகியிருந்தன. மங்களம் மிக அழகு வாய்ந்த பெண்; வயது பதினேழு இருக்கும்; தங்க நிறம்; புருவம் நிரம்ப மயிர். மயக்கத்தைத் தரும்படியான கண்கள்; சிறிய வாய்; மெல்லிய இதழ்; அழகான பல் வரிசைகள்; மனத்தைக் கவரும்படியான புன் சிரிப்பு. அதிக உயரமும் இல்லை; குள்ளமும் இல்லை; கொசுவம் வைத்த புடவை கட்டிக் கொண்டிருந்தால் உயரமாய்த் தெரியலாம்; கரைப் புடவையை வடம ஜாதி முறைப்படி உடம்போடு ஒட்டின மாதிரி தலைப்பை நன்றா யிழுத்து முன் பக்கம் செருகி உடுத்திக் கொண்டிருந்ததனால்



பொம்மை மாதிரி இருந்தாள். முகத்தில் குங்குமம், கழுத்தில் ஒரு குங்கும ரேகை. கிளி கொஞ்சுகிறது என்பார்களே அம்மாதிரியான முகம். மங்களமோ இவ்வளவு அழகு. சாந்திக் கல்யாணம் ஆன புதிது. இன்னும் புருஷன் பெண்சாதிச் சண்டைகள் ஏற்படக் காலமில்லை. அடக்க ஒடுக்கமாய்ப் பயபக்தியுடன் இருந்து வருகிறாள். புருஷன் ஒன்று சொன்னால் பெண்சாதி இரண்டு சொல்லிச் சிக்கி முக்கி ஆரம்பிக்கிறதற்கு இன்னும் நாள் போக வேண்டாமா? பிறர் இருக்கும்போது ஒருவரோடு ஒருவர் யதேச்சையாகப் பேசக் கூட இன்னும் ஆரம்பிக்கவில்லை. இருவரும் அப்படிப் போகும்பொழுதும், இப்படிப் போகும்பொழுதும் கண் ஜாடைகளால் பேசிக் கொள்ளுகிற நிலைமையில்தான் இருந்தார்கள். மனுஷ்ய ஜன்மத்திலேயே இது ஒரு கவாரசியமான காலம் அல்லவா? சுற்றுப் பக்கத்தில் மனுஷ்ய சஞ்சாரம் இல்லாமல் புருஷன் மனைவி இருவரும் இருபத்துநான்கு மணி நேரமும் சல்லாபம் பண்ணிக் கொண்டிருக்கக் கூடாதா என்றுதானே தோன்றும்? பஞ்சாமி அந்த ஸ்திதியில்தான் இருந்தான்.

இதற்குத் தடை அவன் தாயார். தாயார் ஒருத்தி வீட்டில் இருக்கும்போது இஷ்டப் பிரகாரம் இருக்க முடிகிறதா? தாயார் அப்புறம் திரும்பிக் கொண்டிருக்கிற பொழுது பஞ்சாமியும் மங்களமும் ஒருவரையொருவர் பார்த்துக் கண்களால் காதலைக் காண்பித்துக் கொள்ளுகிறதைத் தவிர வேறு எப்படி ஆத்திரத்தைக் காட்டிக் கொள்ள முடியும்? தாயார் பத்து தினங்களாவது ஊருக்குப் போய் இருக்க மாட்டாளா என்று அவர்களுக்குத் தோன்றும்.

தாயார் கெட்ட சுபாவம் உள்ளவள் அல்ல. மாமியாரும் நாட்டுப் பெண்ணும் அன்போடு இருக்கிறது உலகத்திலேயே துர்லபம். காரணம் என்னவென்றால் அது ஒரு மனுஷ்ய தத்துவம் என்றுதான் சொல்ல வேண்டும். பூனையும் எலியும் ஏன் சிநேகமாக இருக்கக் கூடாது? இருக்காததற்குக் காரணம், பூனை, எலி இவைகளுடைய தத்துவம் என்றுதான் சொல்ல வேண்டும். மாமியார் ரகத்தில் எத்தனையோ விதம். பிள்ளைக்கும் நாட்டுப் பெண்ணுக்கும் சண்டை மூட்டி விட்டுப் பிள்ளை சம்சாரத்தை அடிக்கும்போது, ''அடே அப்பா, கையால் அடிக்காதேடா! பெண் பாவம் பொல்லாதது. பெண்ணைக் கை தீண்டி அடிக்கக் கூடாதுடா. ஒரு விறகுக் கட்டையாவது எடுத்துக்கொள்ளுடா!'' என்று சொல்கிற மாமியார்களும் இருக்கிறார்கள். இன்னும் இம்மாதிரியே படிப்படியாய் எத்தனையோ ரகங்கள்.

பஞ்சாமியின் தாயார் இதில் ஒன்றிலும் சேர்ந்தவள் அல்ல. மேலும் இதற்குள் என்ன தெரிந்து விட்டது? நாட்டுப் பெண் வந்து ஐந்தாறு மாதங்கள்தானே ஆயின. இன்னும் போக வேண்டாமா?

ஆனால், பிள்ளைக்குச் சிசுருஷை செய்யப் புது நாட்டுப்பெண்ணை விட்டால் பிள்ளைக்குச் சௌகரியங்கள் சரியாய் நடக்காது என்ற நல்ல எண்ணத்துடனேயே மங்களத்தைப் புருஷனுக்கு ஒரு வேலையும் செய்ய விடுகிறதில்லை. தானே வெந்நீர் விளாவுகிறது, தானே சாப்பாடு போடுகிறது என்று எல்லாவற்றையும் தானே செய்து வந்தாள். எந்தச் சாக்கையாவது முன்னிட்டு மங்களம் அடிக்கடி எதிரில் வந்து கொண்டிருந்தால்தானே பஞ்சாமிக்குத் திருப்தி? அந்தக் கட்டுப்பெட்டிக் கிழம் அதை எங்கே கண்டது? இது விஷயமாய்ப் பஞ்சாமிக்கு ஒரு பதைபதைப்பு. இந்தக் கிழம் பத்து நாட்களுக்கு எங்கேயாவது போய் இராதா என்று தோன்றும்.

பஞ்சாமி விகவம் வீட்டுக்கு ஒரு நாள் சாயந்திரம் போயிருந்தான். விகவமும் பஞ்சாமியைப் போல் புதிதாகக் கிருகஸ்தாசிரமம் கைக்கொண்டவன். அவன் வீட்டில் அவன், அவனுடைய இளம் மனைவி, இவர்கள்தாம். விகவம் மனைவியைக் கூப்பிட்டு, ''காப்பி கொண்டாடி, உப்புமாவாவது கொஞ்சம் கிளறுடி, பஞ்சாமி வந்திருக்கிறான். ஜோக்காய்ச் சாப்பிடுவோம்'' என்று அதிகாரம் பண்ணுவதையும், அவர்கள் இருவரும் சல்லாபமாய் இருப்பதையும் பஞ்சாமி கண்டான். 'இதோ வந்துவிட்டேன்' என்று சொல்லி அடிக்கொரு தரம் விகவம் உள்ளே போவான், வரும்போது சிரித்துக் கொண்டே வருவான். இதையெல்லாம் பார்த்த பஞ்சாமி நாமும் நமது வீட்டில் இப்படி இருப்பதற்கில்லாமல் இருக்கிறதே என்று மன வருத்தம் அடைந்தான்.

அதைப் பற்றியே நினைத்துக் கொண்டு வீடு வந்து சேர்ந்தான். கம்பளியைப் போர்த்துக்கொண்டு தாயார் படுத்துக் கொண்டிருந்தாள்.

''அடே பஞ்சாமி! எனக்குச் சாயந்திரமே பிடிச்ச ஜுரமடா! எழுந்திருக்கவே முடியவில்லை. அந்தப் பெண்ணைச் சாப்பாடு போடச் சொல்லுகிறேன். படுத்தாமல் சாப்பிடுடா. இன்றைக்கு மெள்ள மனசைப் பிடித்துக் கொண்டு சாப்பிட்டுவிடு. நாளைக்கு எனக்கு உடம்பு சரியாய்ப் போய்விடும். நான் வந்து விடுகிறேன்'' என்றாள்.

பஞ்சாமிக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. ''அம்மா! நீ சிரமப்பட்டுக்கொள்ளாதே. எப்படியோ பார்த்துக் கொள்ளுகிறேன். மருந்து ஏதாவது உனக்கு வாங்கிக் கொண்டு வரட்டுமா?''

''மருந்தும் வேண்டாம், மாயமும் வேண்டாம். இப்படியே இருந்தால் காலையில் சரியாய்ப் போய் விடுகிறது. நீ எழுந்து போய்ச் சாப்பிடு!''

பஞ்சாமி சமையல் அறைக்குள் சென்றான். சாப்பாடு போடத் தயாராய் மங்களம் அங்கே இருந்தாள்.

''உன்னைப் படுத்தாமல் சாப்பிட வேண்டுமாமே, நான் உன்னைப் படுத்துவேனுமே! சாப்பாடு கிடக்கிறது. அவசரமாய் முன்னாடி ஒன்று கொடு, பார்க்கலாம்'' என்று முகத்தை நீட்டிக் கொண்டு மங்களத்தினிடம் போனான். மங்களம் தலை நிமிர்ந்து வாயைக் குவித்தாள். ''போதாது; இன்னுமொன்று'' என்றான். மறுபடியும் தலை நிமிர்ந்தாள். ''இன்னொன்று கொடுக்க முடியுமோ?'' என்றான். மங்களம் புன்சிரிப்பு சிரித்துக்கொண்டே ''எல்லாம் அப்புறம் ஆகட்டும். சாப்பிட உட்காருங்கள்'' என்றாள். சாப்பாடு போட இலை எடுத்து வந்தாள். ''இலை

என்னத்துக்கு?'' என்றான் பஞ்சாமி. ''சாப்பிடுவதற்கு'' என்றாள் மங்களம். ''நான் இன்றைக்குக்கூட இலையில் சாப்பிடுவேனா? கையில் பிசைந்து போடு'' என்றான். ''நன்றாயிருக்கிறது. அம்மா பார்த்தால் என்ன சொல்லுவார்?'' என்றாள் மங்களம். ''அம்மாதான் தெட்டுக் கொண்டு கிடக்கிறாளே. அம்மா எங்கே பார்க்கப் போகிறாள்? கையில் போட்டால் போடு; இல்லாவிட்டால் எனக்குச் சாப்பாடே வேண்டியதில்லை'' என்றான்.

''படுத்தாமல் சாப்பிடும்படி அம்மா சொல்லி அனுப்பினாரோ இல்லையோ? ஏன் இப்படிப் படுத்துகிறீர்கள்?'' என்று சரசச் சிரிப்புடன் மங்களம் சொன்னாள்.

''இப்படி யெல்லாம் சொன்னாயானால் அப்புறம் பிசைந்து வாயில் கூடப் போட வேணும் என்பேன்'' என்றான் பஞ்சாமி.

இம்மாதிரியாகச் சல்லாபம் பண்ணிக் கொண்டே மங்களம் கையில் பிசைந்து போடப் பஞ்சாமி அவள் முகத்தைப் பார்த்துக்கொண்டும் விளையாட்டுப் பேச்சு பேசிக் கொண்டும் சாப்பிட்டுக் கொண்டிருந்தான்.

இதற்குள் தாயாருக்கு நாட்டுப் பெண் சரியாய்ச் சாப்பாடு போடுகிறாளோ இல்லையோ என்று அங்கலாய்ப்பு. 'ஐயோ! அப்பா!' என்று முனகிக் கொண்டே சமையலறைப் பக்கமாகத் தட்டுத் தடுமாறிக் கொண்டு வந்தாள்.

''ஐயோ! அம்மா வருகிறாப் போலிருக்கிறதே! என்ன செய்கிறது!'' என்று தவித்தாள் மங்களம்.

''இந்தக் கிழங்களெல்லாம் சுத்த அசந்தர்ப்பக் குடுக்கைகள்'', என்று பஞ்சாமியும் தவித்தான்.

''என்ன செய்கிறது?'' என்று இருவரும் பதைபதைத்தார்கள். மங்களம் திடீரென்று விளக்கை அணைத்து விட்டாள். பெண்களுக்குத்தான் சமயோசித புத்தி தெரியுமே!

''என்னடா விளக்கு அணைந்து விட்டது? ஐயோ, இருட்டாய் விட்டதே'' என்றாள் தாயார்.

''காற்றிலே அணைந்து விட்டது போல் இருக்கிறது. அங்கேயே இரு அம்மா; ஏற்றச் சொல்கிறேன். ஏன் ஜுரத்தோடு எழுந்து வந்தாய்?'' என்றான் பஞ்சாமி.

''சிறுசாச்சே, சரியாகப் போடுகிறதோ இல்லையோ என்று மனசு அடித்துக்கொண்டது. வந்தேண்டா அப்பா! கையில் பிசைந்து போடுகிறாளா என்ன?'' என்றாள் தாயார்.

''இருட்டுக் கிழம்! கொஞ்ச தூரத்திலிருந்தே பார்த்து விட்டாற்போலிருக்கிறது!'' என்று நினைத்துக் கொண்டான்.

''இலையைத் தேடிப் பார்த்தாள்; அகப்படவில்லை. பசியாய் இருந்தது. கையிலாவது போடு என்றேன்.''

''அங்கே எதிரேயேதானே இலை வைத்திருந்தது? கிடக்கட்டும். அவன் சாப்பிட்டதும் எச்சலிட்டு விட்டு உள்ளேப் பார்த்து மூடிக்கொண்டு வா'' என்று மங்களத்தினிடம் சொல்லிவிட்டுப் போய்விட்டாள்.

அன்றுமுதல் பஞ்சாமிக்கு எல்லா வேலையும் மங்களம்தான் செய்கிறது.

''சிறிசுகளுக்கு எப்படி எப்படியோ இருக்க வேண்டுமென்று இருக்குமோ இல்லையோ? சந்தோஷமாய் இருக்கட்டும் என்று விட்டு விட்டேன்'' என்று பஞ்சாமியின் தாயார் அடுத்த நாள் பக்கத்து வீட்டுக்காரியிடம் சொல்லிக் கொண்டிருந்தாள்.



''பத்தாவது மாடியில் குடியிருக்கிறதாலே எனக்குச் செலவு ரொம்ப அதிகமாகிக் கொண்டே போகுது!''
''எப்படி?''
''நான் பத்தாவது மாடியிலிருந்து கீழே இறங்கி வந்து ஏதாவது சாமான் வாங்கறதுக்குள்ளே சாமான் விலை ஏறிடுது!''

'' டிஸ்மிஸ், கல்தா, வேலை நீக்கம், ராஜிநாமா - இதில் உங்களுக்கு எந்த வார்த்தை பிடிக்கும்னு மானேஜர் கேட்கச் சொல்றார், சார்!''





பம்பாயில் உள்ள ஜே. ஜே. ஆஸ்பத்திரியில் ஒரு நோயாளி பதினேழு ஆண்டுகளாகத் தங்கி யிருக்கிறார்!

டைம்ஸ் ஆப் இந்தியா - பாலி

# ஜாக்கி ஜக்கு

கதை: குட்டி கிருஷ்ணன்
சித்திரம்: ராஜ்

13

அந்த இலாகாவின் கவனத்துக்கு வந்த சில புதிர்களை விடுவிக்க ஏதாவது காதில் விழுகிறதா என்று பார்க்க ஸி.ஐ.டி அனந்தாச்சாரி அடிக்கடி பார்களுக்கு விஜயம் செய்வது வழக்கம்.
















சரி, உங்கள் காதல் விவகாரம்?
எனக்கு இரு ஜீவன்களிடத்தில் அபார பிரேமை. அதில் ஒருவர் என் மீது மிகுதி அன்பு செலுத்துவது எனக்குத் தீர்மானமாய்த் தெரியும்!


ஆகா! பேரதிர்ஷ்ட முடைய அந்த ஜீவனின் பெயர்?
ஜிம்மி!
நாயா?


ஆமாம்! அதன் வீர பராக்கிரமம் பற்றி உங்கள் பத்திரிகைக்கு ஏதோ செய்தி கூறுகிறேன்! ஒரு முறை அது சிங்கத்தின் மீது பாய்ந்து அதைக் கடித்துக் குதறிவிட்டது! துளியும் அஞ்சவில்லை!
நிஜமாகவா?


ஆமாம்! போன வருஷத்திய காலண் டரில் அச்சாகி யிருந்த சிங்கம்! அதைச் சின்னா பின்னமாக்கி விட்டது ஜிம்மி!


ஆனால் அதைக் கடைசி வரியில் தெரிவியுங்கள்! தொடக்கத்தில் ஜிம்மி ஒரு சிங்கத்துடன் போராடி வெற்றி கண்டதாகப் பிரமாதப் படுத்தி எழுதுங்கள். 'ஜிம்மியும் ஜக்குவும்' என்று தலைப்பிட்டு ஃபோட்டோ போடுங்கள்!
அடடா! எங்கள் பத்திரிகை தர்மம் உங்களிடம் பிச்சை வாங்கணும்!


கப்பண்ணா அப்போது வந்தார்.
யார் இது? என்ன அரட்டை? ஷூட்டிங்குக்கு நேரமாகலே?
உங்களைத் தான் எதிர் பார்த்துண்டிருக்கேன். நான் பத்திரிகை நிருபர். வைரங்கள் சேகரிப்பது தானே உங்கள் பொழுது போக்கு?

தொடரும்

☐ வாழ்க்கைப் பிரச்னையில் இப்படியும் ஒரு பயங்கரமான பந்தயம் இருக்க முடியுமா? பாங்கருக்கும் வக்கீலுக்கும் நடைபெற்ற இந்தப் போட்டியின் விளைவு......?

# கொடிய பந்தயம்



## ஆண்டன் செக்காவ்



மரண தண்டனை என்ற விஷயம் பற்றி, ஒரு பணக்கார பாங்கருக்கும், இளைஞரான ஒரு வக்கீலுக்குமிடையே விவாதம் மூண்டது. நெடு நாட்கள் சிறைவாசத்தைவிட, மரண தண்டனையே மேலென ஒருவன் கருதுவான் என்று பாங்கர் வாதித்தார். இதை அந்த ஏழை வக்கில் எதிர்த்து, தம்மால், பதினைந்து வருஷ காலம், தனிச் சிறைவாசத்தைச் சகித்துக் கொள்ள முடியும் என்று கூறினார். அப்படி அவர் சிறைவாசம் அனுபவித்தால், அவருக்கு இருபது லட்சம் 'ரூபிள்' வெகுமதி வழங்குவதாக பாங்கர் வாக்களித்தார். அத்துடன் ஒரு நிபந்தனையையும் அவர் விதித்தார். பதினைந்து வருஷங்கள் முடிவடைவதற்கு முன்னால் கைதி வெளியேறினால், இரண்டு மணி நேரத்துக்கு முன்னால் வெளியேறினாலுங்கூட, அவர் பந்தயத் தொகைக்கு உரியவராகமாட்டார் என்பது அந்த நிபந்தனை.

வக்கீல் இதற்குச் சம்மதிக்கவும், பாங்கர் அவரை, தனியானதொரு விடுதியில் அடைத்துக் காவல் போட்டுவிட்டார்.

காலச் சக்கரம் சுழன்றது.

பல விஷயங்கள் பற்றிப் பல புத்தகங்கள் வேண்டும் என்று கைதி கேட்டுக் கொண்டே இருந்தார். பாங்கரும் அவற்றை வாங்கி அனுப்பிக் கொண்டேயிருந்தார்.

அந்தப் பதினைந்து வருஷ காலத்தில், பாங்கரின் விவகாரங்கள் சோர்ந்து மேலும் மேலும் மோசமாகிக் கொண்டு வந்தன.

இதற்கிடையே கெடுவுக் காலமும் நெருங்கி விட்டது.

விடுதலை நாளுக்கு முதல் நாள் இரவில், கைதியின் அறைக்குப் பாங்கர் சென்றார் —




தமிழாக்கம் : சுந்தா

கைதியை எப்படியாவது **கொன்று**விடுவது என்ற கெட்ட எண்ணத்துடன்.

கைதியின் அறையில், விளக்கு ஒன்று மங்கலாக எரிந்து கொண்டிருந்தது. மேஜையின் மேல் குப்புறக் கவிழ்ந்தவாறு, கைதி வக்கீல் சோர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார். மேஜையின் மேலும், நாற்காலிகளிலும் படுக்கையிலும்—எங்கெங்கும்—திறந்த புத்தகங்கள் சிதறிக் கிடந்தன.

மேஜைமேல் ஒரு காகிதம். அதில், பொடி எழுத்துக்களில் பல வரிகள் காணப்பட்டன. பாங்கர் அதைக் கையில் எடுத்துப் படிக்கலானார்........

''நாளை பாதி ராத்திரி வேளையில் எனக்கு விடுதலை கிடைக்கும்; மக்களுடன் கலந்து பழகும் உரிமை கிடைக்கும். ஆயினும், நான் இந்த அறையைவிட்டு அகன்று, சூரிய ஒளியைக் காண்பதற்கு முன்னால், உங்களிடம் ஒரு விஷயம் தெரிவிக்க விரும்புகிறேன். விடுதலை, வாழ்க்கை, ஆரோக்கியம், இந்த உலகின் இன்பங்கள் என்று உங்களுடைய புத்தகங்கள் வர்ணிப்பவை — இவை அனைத்தையும் வெறுக்கிறேன்; வெறுக்கிறேன்; வெறுக்கிறேன்; என் மனச்சாட்சிக்கு ஒப்பியும் என்னைக் காணும் கடவுளின் முன்னிலையிலும் இதைத் தெரிவிக்கிறேன்.

''இந்தப் பதினைந்து வருஷ காலமாய், இந்த உலக வாழ்க்கையை, நான் அக்கறையுடன் ஆராய்ந்துள்ளேன். இத்தனை வருஷங்களாய், உலகத்தையோ, மக்களையோ, நான் காணவில்லை என்பது உண்மையே. ஆயினும் என்ன? உங்கள் புத்தகங்களின் மூலமாய், நான் நறுமண மதுவைப் பருகினேன்; பாடல்கள் இசைத்தேன், வனங்களில் மான் வேட்டையாடினேன்; பெண்களைக் காதலித்தேன்... அழகிய பெண்கள்—உங்களுடைய மாயாவிக் கவிகள் படைத்துள்ள எழில் மங்கையர்—இரவுதோறும் என்னை நாடி வந்து, அற்புதக் கதைகள் சொல்லி என்னை மயக்கினார்கள். உங்களுடைய புத்தகங்களின் உதவியால், மாமலைகளின் கொடுமுடிகளில் ஏறி, காலையில் கதிரவன் உதிப்பதையும், மாலையில் அவன், வானத்திலும், கடலிலும், குன்றுகளிலும் செம்பொன்னை வாரி இறைப்பதையும் கண்டேன். அங்கிருந்தவாறு, எனக்கு உயரே மேகங்களிடையே மின்னல்கள் வெட்டுவதைக் கண்டேன். வனங்களையும், வயல்களையும், நதிகளையும், ஏரிகளையும், நகரங்களையும் கண்டேன். இயற்கை தேவனின் தேமதுரக் குழலோசையைக் கேட்டேன். கடவுளைப் பற்றி வானவர் பேசக் கேட்டேன். உங்கள் புத்தகங்களின் மூலமாய், பாதாளக் கசங்களில் குதித்தேன்; அற்புதங்கள் நிகழ்த்தினேன்; நகரங்களைக் கொளுத்தி அழித்தேன்; புதிய மதங்கள் போதித்தேன்; போரிட்டு நாடுகளைக் கவர்ந்தேன்....

''உங்களுடைய புத்தகங்கள் எனக்கு விவேகம் புகட்டி விட்டன. ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாய், மனித வர்க்கம் எண்ணிய எண்ணங்கள் யாவும், என் சிரசுக்குள் சிறியதோர் உருண்டையாகத் திரண்டிருக்கிறது. உங்கள் எல்லோரையும்விட, நான் அதிகம் அறிந்துளேன்.....

''ஆம், உங்கள் புத்தகங்களையும் நான் வெறுக்கிறேன்; மானில இன்பங்களையும் அறிவையும் வெறுக்கிறேன். எல்லாம் மாயம், சூன்யம், வீண். எதுவும் எதற்கும் உதவாது. நீங்கள், மதிப்புள்ளவராய், அறிஞர்களாய், அழகுடையவராய் இருக்கலாம்; ஆயினும் உங்களை மரணம் அழித்துத் துடைத்துவிடும். உங்கள் சந்ததி, உங்கள் சரித்திரம், உங்களுடைய மேதாவிகளின் 'அமரத்துவம்' — எல்லாவற்றுக்கும் அழிவு நிச்சயம்.

''நீங்கள் வெறி பிடித்துத் தவறான வழியில் திரிகிறீர்கள். பொய்மை மெய்யென்றும், அவலட்சணத்தை அழகென்றும் கருதுகிறீர்கள். ஏதோ கோளாறினால், ஆப்பிள் மரங்களிலும், இச்சிலி மரங்களிலும், கனிகளுக்குப் பதிலாக, தவளைகளும் பல்லிகளும் காய்த்தால், ரோஜா மலர்களிலிருந்து குதிரையின் வியர்வை நாற்றம் வீசினால் நீங்கள் அவற்றை எவ்வளவு வெறுப்பீர்கள்? அது போலவே, நானும் உங்களை வெறுக்கிறேன். நீங்கள் விண்ணைப் பணயம் வைத்து மண்ணைப் பெற்றுக் கொண்டீர்கள். உங்களை நான் புரிந்து கொள்ள விரும்பவில்லை.

"நீங்கள் எதைக் கொண்டு வாழ்கிறீர்களோ, அதை நான் எவ்வளவு துச்சமாகக் கருதுகிறேன் என்பதைக் காட்டுவதற்காக, வெகுமதித் தொகை இருபது லட்சத்தையும் துறந்துவிடுகிறேன். பணமே சுவர்க்கம் என்று, அன்று எண்ணினேன்; இன்றோ அதை உதறித் தள்ளுகிறேன். என்னுடைய உரிமையை நான் இழப்பதற்காக, கெடுவு நேரத்துக்கு முன்னாலேயே நான் வெளியேறி, அதன் மூலம் ஒப்பந்தத்தை மீறப் போகிறேன்........"

இதைப் படித்த பிறகு, பாங்கர், கைதியின் சிரசில் இலேசாக முத்தம் இட்டுவிட்டு, வீட்டுக்குத் திரும்பிச் சென்றார். மறுநாள் காலையில், காவலாளி விரைந்தோடி வந்து, கைதி தப்பியோடி விட்டதாகத் தெரிவித்தான். பின்னர் பாங்கரும் அவருடைய வேலைக்காரர்களும் சென்று, கைதி தப்பியோடியதை, சாட்சிகள் மூலம் நிலைப்படுத்தினார்கள். வதந்திகள் ஏதும் பரவாமல் தடுக்கும் பொருட்டு, அந்த பாங்கர், கைதியின் கடிதத்தை எடுத்துச் சென்று, தமது எஃகுப் பெட்டியில் பத்திரமாய்ப் பூட்டி வைத்தார்.

ஒரு வருஷத்துக்குப் பிறகு....

பாங்கர் விருந்தொன்று நடத்திக் கொண்டிருந்தார். பல அறிவாளிகள் அங்கிருந்தனர். ரஸமான பல விஷயங்கள் பற்றி அவர்கள் உரையாடினார்கள். வாழ்க்கையின் நோக்கம் என்ன, மனிதனின் கதி என்ன என்பது பற்றி, அவர்களிடையே பேச்சு நடந்தது. செல்வம் படைத்த வாலிபனின் போக்கு, பரிபூர்ண குணசீலம், செருக்கு, ஜம்பம், மெய்யன்பு—இவை போன்ற பல விஷயங்களை, அவர்கள் ஆராய்ந்தார்கள். அவர்களில் பெரும்பாலோர், பெரிய பணக்காரர்களாய் இருந்ததால், அநேகமாய் அனைவருமே பணத்தினால் நற்பயன் இல்லை என்றே கூறினார்கள். ஒருவர் சொன்னார்: "நாம் போற்றும் ஞானிகளிலும் மேதாவிகளிலும், பணக்காரர்கள் அபூர்வம். ஆகவே, மனித வர்க்கம் உத்தமப் பக்குவம் அடைவதற்கு, செல்வம் இன்றியமையாதது அல்ல; சுருங்கச் சொல்லப் போனால், செல்வம் அவசியமானதே அல்ல. அநாவசியமான எதுவும், ஓர் இடையூறேயாகும்....."

"ரொம்ப சரி!" என்று, இன்னொருவர் ஆமோதித்தார். "மானிட வாழ்வின் உன்னத நிலை, துறவறமாகும் — அதாவது, ஓர் இலட்சியத்துக்காக, வாழ்க்கையை முழுதுமாய்த் துறந்து விடுவது. ஒரே சமயத்தில், கடவுளுக்கும் பங்கு மார்க்கெட்டிலும் பணியாற்ற முடியாது."

"அது ஏன் அப்படி என்பது எனக்குப் புரியவில்லை" என்று, மூன்றாவதாக ஒருவர் குறுக்கிட்டுப் பேசினார். "வாழ்க்கையைத் துறப்பது, உத்தம நிலை அல்ல என்பது என் கருத்து. என்னைச் சரியாய்ப் புரிந்துகொள்ள வேண்டும்! சித்திரங்களைத் துறப்பது என்றால், அவற்றை வரைந்த ஓவியனைத் துறப்பதாகும்; மாதரை, பொன்னை, மதுவை, நல்ல வசதியைத் துறப்பது என்றால், கடவுளையே துறப்பதாகும்; ஏனெனில், இவற்றையெல்லாம் படைத்தவர் அவரே. துறவிகளும் கடவுளைத்தானே போற்றுகிறார்கள்?"

"முற்றிலும் உண்மை" என்று வயோதிகக் கோமகவரர் ஒருவர் கூறினார். பங்குமார்க்கெட்டில், பாங்கரின் போட்டியாளரான அவர், மேலும் சொன்னார்: "அதோடு, இதையும் சேர்த்துக் கொள்ளுங்கள்; உண்மையான துறவிகள் கற்பனையில்தான் இருக்கிறார்கள். கிழவர்கள் மாதரையும், அலுப்புற்றவர் பணத்தையும், ஏமாற்றம் உற்றவர் புகழையும் வேண்டாம் என்று தள்ளிவிடுவார்கள் என்பது உண்மையே. நான் அறுபத்தாறு வருஷங்களாய் இந்த உலகில் வாழ்ந்திருக்கிறேன். ஆயினும், ஆரோக்கியமும் வலிமையும் புத்தியும் உள்ள ஒருவன், ஒரு லட்சம் ரூபிளை மறுப்பதை, இது வரை ஒருபோதும் பார்த்ததில்லை....."

"இப்படி மறுப்பவர் இருக்கவே செய்கிறார்கள்" என்றார் பாங்கர்.

"நீங்கள் அப்படிப்பட்டவரைச் சந்தித்திருக்கிறீர்களா?"

"ஆம்."

"இருக்கவே இருக்காது" என்று கோமகவரர் கூறினார்.

"இருபது லட்சத்தை ஏற்க மறுத்த ஏழை ஒருவனை நான் அறிவேன். இது சத்தியம்."

கோமகவரர் சிரித்தார். "இதை எப்படி நம்புவது? நான் மறுபடியும் சொல்கிறேன், இப்படிப்பட்டவர் கிடையவே கிடையாது. இது என் உறுதியான கருத்து. இதன் நிமித்தம், நான் பத்து லட்சம் பந்தயம் கட்டத் தயார்!"

"நான் முப்பது லட்சம் கட்டுகிறேன்."

"சம்மதம். நானும் முப்பது லட்சம் கட்டுகிறேன்!"

பாங்கரின் தலை சுழன்றது. தமக்கேதான் வெற்றி என்பதில், அவருக்கு ஐயமில்லை. "பந்தயத் தொகையை ஐம்பது லட்சமாக உயர்த்தாமல் போனோமே" என்று வருத்தப்பட்டார். பங்கு மார்க்கெட்டில், தமது நிலைமையைச் சரிக்கட்டிக் கொள்வதற்கு, அத்தொகை போதுமானதாய் இருந்திருக்கும்.

"இதோ கையடித்துவிட்டேன்" என்று, கோமகவரர் உற்சாகமாய்க் கூறினார். "எப்போது அத்தாட்சி காட்டுவீர்கள்?"

"இப்போதே காட்டுகிறேன்" என்று உற்சாகத்துடன் பாங்கர் சொல்லி, தமது எஃகுப் பெட்டியிலிருந்து கைதியின் கடிதத்தை எடுத்து வருவதற்காக, எழுந்திருந்தார். அப்போது ஒரு சேவகன் வந்து அவரிடம் சொன்னான்: "தங்களைப் பார்ப்பதற்காக ஒருவர் வந்திருக்கிறார்."

பாங்கர் வரவேற்பு அறைக்குச் சென்றார். அங்கே ஒருவர், படபடப்பாக அவரை அணுகி அவருடைய கையைப் பற்றிக் கொண்டு, "மன்னியுங்கள்...என்னை மன்னியுங்கள்...." என்று, நடுங்கும் குரலில் கூறினார். அவருடைய கண்களில் கண்ணீர் தளும்பி நின்றது.

"உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று பாங்கர் கேட்டார். "நீங்கள் யார்?"

"வாழ்க்கையில் பதினைந்து வருஷங்களை வீணாக்கி, இருபது லட்சம் ரூபிள்களைப் பறிகொடுத்த, அந்த முட்டாள்தான் நான்."

"என்ன! நீங்களா? உங்களுக்கு என்ன வேண்டும் இப்போது?" என்று பாங்கர், அடியோடு மாறிப் போயிருந்த அவரைப்



ஸிஸிஎம் புதிய மிர்ராபோ ஃபுல் வாயில் புடவைகள் 2/120x2/120 உயர்தர எகிப்திய பருத்தியால் உருவாக்கப்பட்டவை. 'ஆண்டிகிரஸ்' செய்யப்பட்டதால் என்றும் கசங்காது, மற்றும் பொருத்தமான ஃபுல் வாயில் ரவிக்கைத் துணிகள்.

இதர தயாரிப்புகள்: ஸ்டேலாங்கர், ஸ்ட்ரேஞ்சர் ஷர்ட்டிங்குகள் ● எலகன்ஸா சூட்டிங் ● லவ்லின் ஷர்ட்டிங் ● சில்வர்லைன், சில்வர் கிங் வேஷ்டிகள் ● மல் ● காடா.

# உள்ளக் கிளர்ச்சி அலைகள்...
# வண்ணக் கவர்ச்சி சேலைகள் !

## நியூ மிர்ராபோ

ஃபுல் வாயில் புடவைகள் 2/120x2/120

ADWAVE CCM 29 TM-A



உங்கள் குடும்ப நண்பன்...CCM

**தி கோயம்பத்தூர் காட்டன் மில்ஸ் லிமிடெட்**

மார்க்கெட் செய்பவர்கள்: வெங்கடேஷ் வஸ்திராலயா

பார்த்து மறுபடியும் கேட்டார். அவருடைய முகம் வெளிறிப் போயிற்று.

"நான் முட்டாள்.... தவறு செய்து மோசம் போனேன். வாழ்க்கையைக் காணாத ஒருவன், அதன் இன்பங்களை அனுபவிக்கச் சக்தியற்ற ஒருவன், அதை எப்படி மதிப்பிட முடியும்? சூரிய ஒளி எவ்வளவு ரம்மியமாய் இருக்கிறது! பெண்கள் எவ்வளவு அழகாய் இருக்கிறார்கள்! மதுவில் எவ்வளவு இனிமை! மரங்களில் எவ்வளவு வனப்பு!.... புத்தகங்களில் காண்பது, வாழ்க்கையின் மங்கலான சாயலேதான்; நிழலைக் கண்டு மோசம் போனேன்."

வக்கீல் மேலும் சொன்னார்: "நான் இருபது லட்சம் கேட்கவில்லை. அவ்வளவு கேட்பதற்கு உரிமை இல்லை எனக்கு. தயை செய்து, ஒரு லட்சம் அல்லது இரண்டு லட்சம் ரூபீன் கொடுங்கள். கொடுக்காவிட்டால் என்னை மாய்த்துக் கொள்வேன்."

கம்மிய குரலில், "சரி, நானே வாருங்கள், நீங்கள் கேட்பதைக் கொடுக்கிறேன்" என்று பாங்கர் சொன்னார்.

சொல்லிவிட்டு, நண்பர்களை நோக்கிச் சென்றார். திடீரென்று ஒரு யோசனை தோன்றியது. "செல்வம், சுதந்திரம், பெண்ணாசை, ஆரோக்கியம், மனிதர் பேச்சு — இவை எல்லாவற்றையும் நான் வெறுக்கிறேன். என்னுடைய உடைமைகளையெல்லாம் ஏழைகளுக்குத் தானம் செய்துவிட்டு, துறவியாய்ச் செல்லப் போகிறேன்." இவ்வாறு நண்பர்களிடம் அறிவித்தால் என்ன என்று எண்ணினார்.

ஆனால், நண்பர்களை நெருங்கிய போது இன்னொர் எண்ணம் குறுக்கிட்டது : "என்னிடம் உள்ளதைவிடக் கொடுக்க வேண்டியதே அதிகமாய் இருக்கிறது ; பெண்களை நேசிக்கவோ, மதுவை அருந்தவோ வலிமை இல்லை; ஆகவே, என்னுடைய துறவை யாரும் ஒப்புக் கொள்ளமாட்டார்கள்."

இந்த எண்ணத்தினால், சோர்வு மேலிட, தொப்பென்று ஒரு நாற்காலியில் விழுந்தார்.

"நான் தோற்றேன், தொலைந்தேன்" என்று நண்பர்களைப் பார்த்துச் சொன்னார்.

# பலசாலி யார்?

அந்த மனிதன் மிகுந்த திடசாலி. அவனிடம் நிறையப் பணம் இருந்தது. ஒரு நாள் அவன் பர்ஸில் இருபது பவுண்ட் நாணயங்களைப் போட்டுக் கொண்டான்.

"நான் இப்பொழுது பிரயாணம் செய்யப் போகிறேன். நான் போய்க் கொண்டே இருப்பேன், என்னைவிடப் பலசாலியைச் சந்திக்கும் வரையில்! அவனைக் கண்டுவிட்டால் அவனுக்கு இந்தப் பர்ஸை வழங்கி விடுவேன்" என்று மனத்துக்குள் திட்டமிட்டான்.

வழி நெடுகப் 'பலசாலியான ஒருவனைக் கண்டதுண்டா?' என்று விசாரித்துக் கொண்டே போனான். கடைசியில் ஒரு கொல்லன் இருப்பதாகத் தெரிய வந்தது.

"எனது பைப் எரிய வைக்க ஏதாவது இருக்கிறதா?" என்று கேட்டான் குதிரை வீரன்.

கொல்லன் தன் உலை அடுப்பைக் கிளறித் துருத்தி கொண்டு ஊதி அதிலிருந்து ஓர் எரியும் கரியைச் சாமணத்தால் தூக்கிக் கொடுத்தான். தனது 'பைப்' பைப் பற்ற வைத்துக் கொண்டான் குதிரை வீரன்.

"எனது குதிரைக்கு லாடம் செய்து தர முடியுமா? ஏதாவது செய்து வைத்திருக்கிறாயா?" என்றான் குதிரை வீரன்.

கொல்லன் தன் உலைக் களத்திலிருந்து ஒரு குதிரை லாடத்தை எடுத்துக் கொடுத்தான். "இது போதுமா?" என்றான்.

"கொண்டா, பார்க்கலாம்!" என்று கூறிவிட்டு, அதை வாங்கி இரு கைகளாலும் பிட்டு, "இது சுகமில்லை!" என்றான்.

மற்றொரு குதிரை லாடம் வந்தது. அதுவும் குதிரை வீரனின் கையில் நொறுங்கியது. "இன்னொரு லாடம் கொடு!"

"உனக்கு இன்னொரு லாடம் கொடுத்து என்ன பிரயோசனம்?" என்றான் கொல்லன் தயங்கிய படியே. அடுத்த லாடம் உடையாதிருக்கவே, "இது சரியாயிருக்கிறது!" என்றான் குதிரை வீரன்.

குதிரைக்கு லாடம் அடித்ததும், "உனக்கு நான் எவ்வளவு தரவேண்டும்?" என்று கேட்டான் அவன்.

"அரை கிரௌன்!" என்ற கொல்லனிடம் அதைக் கொடுத்தபோது, அவன் தன் விரல்களுக்கிடையே அந்த நாணயத்தை வைத்து இரண்டாகப் பிளந்து விட்டான்.

"இது சுகமில்லை. இன்னொன்று கொடு!" என்றான் கொல்லன். இரண்டாவது நாணயத்தையும் இரண்டாக உடைத்தான் கொல்லன்.

பலசாலிக் கொல்லன் மூன்றாவது நாணயம் தரக் கோரியதும் குதிரை வீரன் தயங்கினான்.

"இன்னொன்றைப் பரீட்சித்துப் பார்க்கிறேன்!" என்ற கொல்லனிடம், மற்றொரு நாணயத்தைக் கொடுத்தான் குதிரை வீரன். "இது போதும்!" என்றான் கொல்லன்.

அடுத்த கணம் குதிரை வீரன், தன் பையிலிருந்து பர்ஸை எடுத்துத் தன்னைவிடப் பலசாலியான கொல்லனிடம் கொடுத்து, "குதிரை லாடத்தை நான் பற்றிக் கொண்டு உடைக்க வசதியாக இருந்தது. அரை கிரௌன் நாணயத்தைப் பற்றிக்கொள்ள இயலாதிருந்தும் நீ அதை உடைத்துக் காட்டினாயே! நீயே பெரிய பலசாலி!" என்றான். —பி. எஸ். மணி

- அயர்லாந்து நாடோடிக் கதை



# க்ளினிக் ஷாம்பூ பிரயோகம் செய்து தலைப்பொடுகினை ஒழியுங்கள்!

க்ளினிக் என்பது ஷாம்பூ ரகங்களில் ஒன்று மட்டுமல்ல. தலை மயிரிலும் அதன் அடியிலுள்ள சருமத்திலும் உள்ள தலைப்பொடுகினை உண்மையாகவே ஒழித்திட அது விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட ஒரு முற்றும் புதிய சாதனமாகும். சக்திவாய்ந்த நுண்மக்கொல்லியாகிய TCC• இதனுள் அடங்கியிருப்பதால், இது முதல் முறை கழுவும்போதே தலைப்பொடுகினை அழித்து விடுகிறது. தவறாது க்ளினிக் பிரயோகம் செய்வதன் மூலம், தலைப்பொடுகு பரவுவதிலிருந்து நீடித்த பாதுகாப்பைப் பெறலாம்.

தலைப்பொடுகினை மட்டுமே க்ளினிக் ஒழிக்கிறதே அன்றி தலை மயிருக்கு எந்தவித சேதமும் ஏற்படுத்துவதில்லை. மற்ற மருந்து கலக்கப்பட்ட ஷாம்பூக்களைவிட அது அதிக இதமளிக்கிறது. ஏனென்றால், அதனுள்ளேயே தலை மயிருக்குப் பாதுகாப்பளிக்கும் சாதனம் அடங்கியுள்ளது. தலைமயிர் அழகாகவும், உறுதியாகவும், பளபளப்புடனும் இருக்க உதவுகிறது க்ளினிக்.

• 0.15% 3,4,4 ட்ரைக்ளோரோ கார்பானிலைட்




**க்ளினிக் பிரயோகம் செய்யும் முறை**



TCC• என்னும் புதிய நுண்மக்கொல்லி உடனேயே செயல்பட்டுத் தலைப்பொடுகினை அகற்றி விடுகிறது. உபயோகத்திற்கு இடையிடையே பாதுகாப்பளிக்கிறது.



2வது முறை பெருகும் நுரையினைத் தலையிலேயே ஒரு நிமிடம் இருக்க விடுங்கள். அப்பொழுதுதான் க்ளினிக்கின் ஃபார்முலா அடிவரையில் ஊடுருவிச்சென்று நல்ல சக்தியுடன் செயல்படும்.



அடிவரை ஊடுருவிச் சென்று செயல்படும் இதமான திரவகமாதலால் தலைப் பொடுகினை அழித்து தலைமயிரை அழகுடனும் உறுதியுடனும் வைக்கிறது.



வாரம் ஒரு முறையாவது க்ளினிக் தவறாது பிரயோகம் செய்யுங்கள். தலைப் பொடுகிலிருந்து நீடித்த பாதுகாப்பைப் பெறுங்கள்.

## க்ளினிக் ஷாம்பூ

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு

HLC-5141 A

# இலக்கிய மலர்கள்

மீ. ப. சோமு

## 7. மூன்று மரங்கள்

பிறருக்கு உதவி செய்வது என்ற கருணையும் ஈகையும் படிப்பினாலும் பயிற்சியினாலும் வந்து விடக்கூடிய குணங்கள் அல்ல என்று பெரியோர்கள் சொல்வார்கள்.

ஒருவனுக்குச் சித்திரம் வரையக் கற்றுக் கொடுத்துவிடலாம். எதுகை மோனைகளோடு செந்தமிழ் பேசச் சொல்லிக் கொடுத்துவிடலாம். ஒரு பெரிய கல்விமானாகவுமே ஆக்கி விடலாம். நடைப் பழக்கத்தினால் நல்ல நடை, ஆசாரம் முதலியவற்றையும் கற்பித்து விடலாம். ஆனால், வாழ்க்கையோடு பழகுவதும், நட்புக் கொள்வதும் ஆகிய இதயப் பாங்கு இருக்கிறதே அதுவும், கருணையும், ஈகையும் பிறவியிலேயே வர வேண்டிய பண்புகள். அறிவுப் பண்பாடு எத்தனை இருந்தாலும், இந்த இதயப் பண்பாடு கிடைப்பது மட்டும் பிறவியின் அமைப்புத்தான்!

இவ்வாறு பாடுகிறார் அவ்வையார்:

> சித்திரமும் கைப்பழக்கம்
> செந்தமிழும் நாப்பழக்கம்
> வைத்ததோர் கல்வி
> மனப்பழக்கம் – நித்தம்
> நடையும் நடைப்பழக்கம்
> நட்பும் தயையும்
> கொடையும் பிறவிக்
> குணம்!

[வைத்த — பெரியோர்கள் ஆராய்ந்து வகைப்படுத்தி வைத்துள்ள. ஒரு கல்வி — ஒப்பற்ற படிப்பு. கொடை — ஈகை, வள்ளன்மை.]

பிறருடைய துன்பங்களைக் கண்டு இரக்கப்படுவது என்பது தானாக, தன்னியல்பாக வர வேண்டிய உள்ளுணர்ச்சி! எத்தனை அறிவுக் கூர்மை இருந்தாலும், இந்தக் குணம் மட்டும் பிறவிப் பண்புதான்!

இத்தகைய உதவி மனப்பான்மையிலும் பாகுபாடுகள் உண்டு.

சிலர் தாங்கள் உதவி செய்யப் போவதாக முன்கூட்டிச் சொல்லாமலேயே "திடுதிப்" பென்று மௌனமாகச் செய்து விடுவார்கள்! சிலர் உதவுவதாக வாக்களித்து அதன்படி செய்வார்கள். இன்னும் சிலர் உண்டு. சிலர் என்ன, பலர் உண்டு. செய்கிறேன் என்று சொல்லுவார்கள். செய்ய மாட்டார்கள்!

இந்த மூன்று வகையான மன இயல்புகளையும் அவ்வையார் பார்த்திருக்கிறார். பாடுகிறார்:

> — நல்ல
> குலாமாலை வேற்கண்ணாய்

[நல்ல குலாமாலை — அழகாக விளங்குகிற பூமாலை அணிந்த. வேற்கண்ணாய் — வேல் போன்ற கண்களை உடைய பெண்ணே!]

"பெண்ணே, ஒரு பெரிய உண்மையை உனக்குச் சொல்கிறேன், கேள்!" என்று தாம் தமது வாழ்விலே ஆராய்ந்து கண்டறிந்த பேருண்மையைக் கூறுகிறார் அவ்வையார்.

> சொல்லாமலே பெரியர் ;
> சொல்லிச் சிறியர் செய்வர் ;



**சொல்லியும் செய்யார்**
**கயவரே**

பெரியவர்கள் முன்னறிவிப்பு இல்லாமல் உபகாரம் செய்வார்கள். சாதாரண மனிதர்கள் உபகாரம் செய்கிறேன் என்று சொல்லிவிட்டுச் செய்வார்கள். அதாவது வாக்களித்தபடி செய்வார்கள். அற்பர்கள் எப்படி இருப்பார்கள்? ''ஆகட்டும், செய்கிறேன்'' என்று சொல்வதோடு சரி. செய்ய மாட்டார்கள்!

— நல்ல

**குலாமாலே வேற்கண்ணாய்!**
**கூறுடவமை நாடில்**
**பலா,மாவை, பாதிரியைப்**
**பார்!**

இந்த மூன்று வகையான மனிதர்களுக்கும் மூன்று உவமைகளை, உதாரணங்களைத் தாவர உலகத்திலிருந்து சுட்டிக் காட்டுகிறார் அவ்வையார்.

பலாமரம் கண்ணுக்கு நன்கு தெரியும்படி ஆடம்பரமாகப் பூக்காமலே காய்க்கிறது. அதாவது வெளிப்படையான முன்னறிவிப்பு இல்லாமலேயே பலன் தருகிறது. மாமரம் இருக்கிறதே அது, நன்றாகப் பூத்து அதன் பின் காய்க்கிறது. வாக்குத் தந்து அதன்படி தருகிற பழம் அது! ஆனால் பாதிரி மரம் என்று ஒரு வகை! அது பூப் பூக்கும். காய்ப்பதில்லை. பூத்தும் பயன் தராத இந்தப் பாதிரி மரத்தைப் போன்றவர்களே கயவர்கள்! வாக்களித்துவிட்டு, வார்த்தையிலே காண்பித்து விட்டுச் செயலிலே பயன் கொடாத பிறவிகள் அவர்கள்!

**சொல்லாம லேபெரியர்**
**சொல்லிச் சிறியர்செய்வர்**
**சொல்லியும் செய்யார்**
**கயவரே — நல்ல**
**குலாமாலே வேற்கண்ணாய்!**
**கூறுவமை நாடில்**
**பலாமாவைப் பாதிரியைப்**
**பார்!**

கயமை என்பதும் ஈகையைப் போலவே பிறவியின் அமைப்பு! இந்த இயல்பான இயற்கைக்கு மனித குலத்தோடு தாவர உலகுமே ஒப்புத்தான்!

உவமைகள் பொருத்தமாக அமைந்துள்ள நேர்த்தியைப் பார்த்தால், மனித மனத்தின் தன்மைகளை விளக்குவதற்காகவே இந்த மூன்று மரங்களும் மண்மீது வளர்ந்து நிற்கின்றனவோ என்று சொல்லத் தோன்றுகிறதல்லவா? கவித் திறத்தின் தகைமையும் தத்துவமும் அப்படி!

# கண்

(நாடகம்)

அக்கன் எழுதிய குடும்ப நாடகம் கண். நாடகத்தை உலகமாகவும் உலகத்தை நாடகமாகவும் காணும் மரபை ஒட்டி இந்த நாடகத்தைக் குடும்ப நாடகமாகவும் கொள்ளலாம்; நாடகக் குடும்பமாகவும் கொள்ளலாம்.

குடும்பத்தை அணி செய்யப்பல பாத்திரங்கள் இருக்கும். சில உபயோகத்தில் இருக்கும்; சில அலங்காரமாக இருக்கும். எப்பொழுதாவது விசேஷங்களில் பயன்படும். அதேபோல் இந்த நாடகக் குடும்பத்தில் பல பாத்திரங்கள் வளைய வருகிறார்கள். வெகுசிலரே பங்கு எடுத்து நடத்திச் செல்கிறார்கள்.

குடும்பத் தலைவர் சோமசுந்தரம் குடும்பத்தில் ஒரு கண் வைத்து ஆதரிசக் குடும்பமாக நடத்தத் திட்டமிடுகிறார். ஆனால் கண் இருந்தும் குருடராக நடந்து கொள்ளுகிறார். தம் பிள்ளைகளின் போக்கையோ, மனைவியின் போக்கையோ கண்டும் காணாமல் நடிக்க நாடக மேடையில்தான் முடியும் என்பதைக் காட்டிவிடுகிறார்.

மேஜர் பழனிவேல் என்று ஒரு பாத்திரம்; சோமசுந்தரத்தின் நண்பர் அவர். கண்ணிருந்தும் குருடாக [illegible] குடும்பத்தைக் கண்காணிக்கும் எண்ணத்தை விதைத்துச் சென்று விடுகிறார். இடியும் மின்னலும் அவரைக் குருடாக்க உதவுவது போல் தோன்றினாலும், ஸஸ்பென்ஸ் நிற்கவில்லை.

பார்த்தும் பாராதவராக நடிக்கும் சோமசுந்தரத்தின் பாத்திரத்தை ஏற்றிருப்பவர் திரு ஆர். பாலபாஸ்கர். நேர்த்தியாக நடித்திருக்கிறார். ஆனால் நடிப்புக்கும் குரலுக்கும் வசனத்தைக் கையாளுவதற்கும் தமக்கென்று ஒரு தனித் தகைமை ஏற்படுத்திக்கொள்ளாமல் பிற பல பிரபல நடிகர்களின் நினைவை ஏன்தான் ஏற்படுத்துகிறாரோ?

பிளாக்மெயில் ராமநாதனாக வரும் ஸ்ரீ ஏ. எல். நரசிம்மனுக்கு வில்லனாகக் காட்டிக் கொள்ளாமல், வில்லனாக நடிக்க வேண்டிய பாத்திரம். பாத்திரப் படைப்பை இன்னும் சரிவர கவனித்திருந்தால், ஒரு வேளை அவர் நடிப்பு பளிச்சிட்டிருக்கலாம்.

இந்த நாடகத்துக்கு ஒளியும் உயிரும் ஊட்டுபவர் புரொபஸர் சாம்பசிவம். இப்பாத்திரம் ஏற்று ஐ.எஸ். ராமச்சந்திரன் அநாயாசமாக நடித்துக் களைகட்டச் செய்கிறார். இதற்கு நகைச்சுவை - பழையவை - புதியவை எல்லாம் கலந்து உதவுகின்றன.

இந்த நாடகத்தில் இரண்டு பெண் பாத்திரங்கள். நடிப்பால் பளிச்சிடவில்லை என்றாலும் ஆடை-அணியினால் பளிச்சிட முயல்கிறார்கள். வேறுசில பாத்திரங்கள் மேடைக்கு அழகாக - நாடகத்துக்கு இலக்கணமாக வந்து செல்கிறார்கள். இவர்கள் இல்லாமலேயே கூட நாடகம் மேடையேற முடியும்.

அக்கன் இலக்கிய நயம் கொண்ட கருத்துச் செறிந்த வசனங்களைப் பல இடங்களில் கையாண்டு மெருகேற்றியிருக்கிறார். நாடக அமைப்பிலும் பாத்திரப் படைப்பிலும் கவனம் செலுத்தியிருந்தால் நன்றாயிருக்கும். தென்னிந்திய ரயில்வேயைச் சேர்ந்த லலித கலா நிலையம் மேடையேற்றிய இந்த நாடகம் பொது நலப் பணிகளுக்கும் பண உதவிபுரிந்து கண்ணான காரியத்தைச் செய்திருக்கிறது.

- ரா. வீ.



## இலவசம்

ஒரு ஜார்
விக்கோவின் **டெர்மரிக்**




விக்கோவின் **வஜ்ரடந்தி**

(எகானமி சைஸ்) வாங்கினல் டெர்மரிக் வானிஷிங் க்ரீம் ஒரு ஜார் இலவசமாகப் பெறுவீர்கள்.




### உண்மையிலேயே இது ஒரு மகத்தான சலுகை

**விக்கோ வஜ்ரடந்தி**
ஆயுர்வேத பற்பசை

இந்த ஆயுர்வேத பற்பசை மதிப்புமிருந்த மூலிகைகளினுல் தயாரானது. இதைத் தொடர்ந்து உபயோகித்து வந்தால் பல் சொத்தை, பற்களில் சீழ்ரத்தம் வடிதல் நாற்றம் ஈறு வீக்கம் ஆகியவை மறையும்.

**விக்கோ டெர்மரிக்**
வானிஷிங் க்ரீம்
சந்தண நறு மணமுள்ளது.

உங்கள் நிறத்திற்கு மேலும் அழ கூட்டுகிறது. சருமத்தை மென்மையாகவும் பளபளப் பாகவும் வைத்திருக்க உதவுகிறது. ஷேவிங் செய்துகொண்டபின் உபயோகிக்க அருமையானது. வெட்டு, காயங்களைக் குணப்படுத்தும்.

முந்துங்கள் !
இன்றே வாங்குங்கள்

ஸ்டாக்குகள் தீரும்வரையெ இந்தச்சலுகை

**விக்கோ லாபொரெட்டரீஸ்**
பம்பாய்-14

இலங்கை, மலேயா, சிங்கப்பூர் ஆகிய இடங்களுக்கு ஏஜண்டுகள் தேவை

மெஸர்ஸ் மோர்லிஸன் & ஸன்ஸ், 107-A, ஆற்காட் ரோடு, சென்னை-24
மெஸர்ஸ் M. N. A. அப்துல் மஜீத், 61/62, பந்தர் தெரு, சென்னை-1
மெஸர்ஸ் A. கோபால் நாயர் & ஸன்ஸ், 57, பைகிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி, சென்னை-5
மெஸர்ஸ் ஸ்ரீ வாஸவி பஸார், 465, பெரிய தெரு, கோயமுத்தூர்
மெஸர்ஸ் ராஜேந்திரா ஸ்டோர்ஸ், 48, டவுன்ஹால்ரோட்டுத் தெரு, மதுரை-1

குளிர்காலத்திலும் சரி,
கோடைகாலத்திலும் சரி—
மார்கோசோப்
சுத்தம் செய்வதோடு மட்டும்
நிற்பதில்லை—
சருமத்தை பாதுகாக்கிறது.

**ஏனெனில் மார்கோவில்
மட்டுமே வேப்பெண்ணெய்
சேர்ந்துள்ளது.**




**மார்கோ சோப்**

ஒரு கல்கத்தா கெமிகலின் தயாரிப்பு

CCM-4183-A (Rev)

# இருபத்தாறுவது அத்தியாயம்



# சத்திய வெள்ளம்

நா. பார்த்தசாரதி

நகரின் பல பகுதிகளிலிருந்து பல்கலைக் கழக எல்லைக்குள் வரும் டவுன் பஸ் ஊழியர்களுக்கும், மாணவர்களுக்கும் பலமுறை மோதல்கள் வந்திருக்கின்றன. எல்லா மோதல்களுக்கும் ஒரு சிறிய பூசலே காரணமாயிருக்கும். எப்படியோ அது வளர்ந்து பெரிய அடிதடியாகிவிடும். பல்கலைக் கழகத்துக்கு வரும் பஸ் போக்குவரத்து மல்லை இராவணசாமிக்கு உரியதாகிய பின் இந்த மோதல்கள் மிகவும் அதிகமாயிருந்தன. முன்பு ஒரு முறை இப்படி ஒரு பூசல் நடந்தபோது மாணவர்களுக்கும், பஸ் ஊழியர்களுக்கும் மூண்ட போரில் மாணவர்கள் மேல் மட்டும் தடியடிப் பிரயோகம் நடந்தது. அந்தச் சம்பவம் நடந்த ஒரு வாரத்துக்குப் பின் அமைச்சர் கரியமாணிக்கம் மல்லை இராவணசாமியின் பஸ்களில் வேலை பார்க்கும் ஊழியர்கள் தொழிலாளர்கள் அடங்கிய ஒரு கூட்டத்தில் பேசும்போது ''இந்த அரசு உங்கள் அரசு! ஒரு வாரத்துக்கு முன் உங்களிடம் வம்பு செய்த மாணவர்களுக்குத் தடியடி கிடைத்தது. உங்களுக்கோ அதனால் நியாயம் கிடைத்தது'' என்று ஏதோ தத்துப் பித்தென்று பேசி அது எதிர்க் கட்சிப் பத்திரிகைகளில் எல்லாம் வெளிவந்துவிட்டது. அந்தப் பேச்சிலிருந்த மாணவர் விரோதப் போக்கை எதிர்த்து நாடு முழுவதும் உள்ள மாணவ சமூகம் கொதித்து எழுந்தது. அதைத் தொடர்ந்து அந்த மந்திரி எந்த ஊருக்குப் போனாலும் மாணவர்கள் 'ஒழிக' கோஷத்துடனும், கறுப்புக் கொடிகளுடனும் அவரை எதிர்த்தார்கள். சில மாதங்கள் வரை மாணவர்களுக்கு முன் அந்த அமைச்சர் தலைகாட்ட முடியாமலே இருந்தது. அப்போது மணவாளன்தான் மாணவர் தலைவரா யிருந்தார். அந்தப் போரை அவர் முன்னின்று நடத்தி யிருந்தார்.

இப்போது மாணவி பத்மாவுக்கு ஏற்பட்ட அநுபவத்திலிருந்தும் ஒரு பெரிய போராட்டம் விளைந்து அதனாலேயே பட்டமளிப்பு விழா நாலைந்து மாதங்களுக்குத் தள்ளிப் போய்விடுமோ என்று நினைத்தான் பாண்டியன். ஆனால் இரு பக்கத்து உண்மையும் தெரியாமல் அதை அவன் பெரிதாக்க விரும்பவில்லை. பட்டமளிப்பு விழாவின் போது மாணவர்கள் என்ன செய்யப் போகிறார்கள் என்பதை அறியவும், தடுக்கவும் துணைவேந்தர் தவிப்பதையும்கூட அவன் புரிந்து கொண்டிருந்தான். அரசாங்கமோ எப்படியாவது மாணவர்களை அமைதியடையச் செய்ய முயல்வதாகத் தெரிந்தது. ஊர்வலத்தன்று பஜார் ரோடு ஹோட்டலில், முரட்டுத்தனமாக நடந்து கொண்டவர்களில் சிலரைக் கைது செய்து வழக்குத் தொடர்ந்திருந்தார்கள். மாணவர்கள் மேல் தடியடிப் பிரயோகம் நடந்ததைப் பற்றி நீலிக் கண்ணீர் வடித்துவிட்டு ஒரு நீதி விசாரணைக்கும் உத்தரவிட்டிருந்தது அரசாங்கம். மாணவர்கள் மேல் எந்த வழக்கும் பதிவு செய்யப்படவில்லை. வரப்போகிற பட்டமளிப்பு விழாவையும் அந்தப் பட்டமளிப்பு விழாவில் அமைச்சர் கரியமாணிக்கம் டாக்டர் பட்டம் பெறும்போது மாணவர்களால் எந்த அசம்பாவிதமும் நடக்கக் கூடாது என்பதையும் மனத்தில் வைத்துக் கொண்டு அரசாங்கமும், பல்கலைக் கழக நிர்வாகமும் காரியங்களைச் செய்வது புரிந்தது. ஆனாலும் துணைவேந்தர் ஊர்வலத்தில் ஹோட்டல்முன் சோடாபுட்டி வீச்சினால் காயமடைந்த மாணவர்களையோ, தடியடிப் பிரயோகத்தினால் பாதிக்கப்பட்ட மாணவர்களையோ சந்தித்து ஆறுதலாக இரண்டு வார்த்தைகள் கூடச் சொல்லவில்லை. மாணவர்கள் காரணமின்றித் தாக்கப்பட்டது பற்றி வருத்தம் தெரிவிக்கவும் இல்லை. தன்னையும், மோகன் தாஸையும் கூப்பிட்டுப்

பேசியபோது கூட அவர் அநுதாப வார்த்தைகள் எதையும் தங்களிடம் கூறவில்லை என்பதை நினைத்தபோது பாண்டியனுக்கு வருத்தமாக இருந்தது. இந்த நிலையில் 'பல்கலைக் கழக எல்லைக் குள் வரும் டவுன் பஸ் ஊழியர்களில் சிலர் மாணவ மாணவிகளிடம் முறை யின்றி நடந்து கொள்கிறார்கள்' என்ப தைத் துணைவேந்தரிடம் புகார் செய்து பரிகாரம் தேட முடியாது என்பது அவ னுக்குத் தெளிவாக விளங்கி விட்டது. இதைப்பற்றிச் சிந்தித்தபடியே வகுப் புக்குப் போனான் அவன். முதற் பாட வேளை ஆங்கில வகுப்பு. விரிவுரையா ளர் காமாட்சிநாதன் ஷேக்ஸ்பியரைக் கரைத்துக் குடித்தவர். சாவி கொடுத்த யந்திரம் போல் நாற்பத்தைந்து நிமிஷம் சொற்பொழிவு செய்வார். கடைசிப் பதினைந்து நிமிஷங்களில் பத்து நிமிஷம் சந்தேகம் இருந்தால் மாணவர்கள் அவ ரைக் கேள்வி கேட்கலாம். ஆனால் கேள் விகள் கண்டிப்பாக ஆங்கிலத்தில்தான் இருக்க வேண்டும். ஆங்கிலத்தில் கேட் கப்படுகிற கேள்வியின் வாக்கிய அமைப் புப் பிழையாக இருந்தாலோ அதையே பிடித்துக் கொண்டு அந்தப் பையனை வம்பு செய்வார் என்பதனால் அவரிடம் கேள்வி கேட்க முக்கால்வாசி மாணவர் களுக்குப் பயம். கடைசி ஐந்து நிமிஷம் அட்டெண்டன்ஸ் எடுப்பார். அதோடு வகுப்பு முடிந்து விடும். கடுமையான லத்தின் வார்த்தைகளைக் கலந்து சாஸர் காலத்து ஆங்கிலம்போல் மாணவர்கள் மிரளும் ஆங்கிலத்தில் அவர் 'லெக்சரை' நடத்தும்போது சில மாணவர்களுக்குத் தூக்கம்கூட வரும். தூங்குகிற ஒரு மாணவனை அவர் பார்த்து விட்டாலோ வகுப்பில் அவன் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டு விரிவுரையின் நடுவே ''லுக் அட் மீ அண்ட் ஹியர் வாட் ஐ ஸே... அதர்வைஸ் யூ வில் பீ தி லூஸர்'' என்று இரைந்து கத்துவார் அவர். அதற்குப் பயந்து புத்தகத்தைக் கோட் டைச் சுவர் போல் டெஸ்க்கில் நிறுத்தி வைத்து அந்த மறைவில் முகம் புதைத் துத் தூங்குபவர்களும் உண்டு. சில சமயங்களில் அவரே விரிவுரை முடிந் ததும் தமக்குத் தாமே சிரித்தபடி, ''கும்பகர்ணங்க இனிமே முழிச்சுக்க லாம். லெக்சர் இஸ் ஃபினிஷ்ட், நௌ யூ மே ஆஸ்க் க்வஸ்ச்சின்ஸ்'' என்று கூறுவதும் உண்டு. அன்றைய வகுப்பில் 'நவீன ஆங்கில இலக்கியம்' பற்றி ஒரு சொற்பொழிவு செய்தார் காமாட்சிநாதன். முக்கால் மணி நேரம் ஓடியது தெரியவில்லை. வகுப்பு முடிந்ததும் அடுத்த வகுப்புக்குப் போவதற்கு முன் காப்பி குடிப்பதற் காகப் பாண்டியனும் வேறு நாலைந்து மாணவர்களும் காண்டீன் பக்கம் போய் வந்தார்கள். அப்போது காண்டீனில் வேறு நாலைந்து மாணவிகளோடு மீண் டும் அந்த பி. எஸ்ஸி. மாணவி பத்மா வைச் சந்தித்தான் அவன். அவளிடம் வம்பு செய்யும் பஸ் கண்டக்டர் பற்றிச் சக மாணவர்களிடம் அவன் தெரிவித்த போது அந்த மாணவர்களில் உள்ளூர் வாசிகள் சிலரும் பஸ் ஊழியர்களிடம் தங்களுக்கு ஏற்பட்ட கசப்பான அநுப வங்களைச் சொல்லத் தொடங்கினார்கள். குறிப்பாக மல்லை இராவணசாமியின் பஸ்களில் அவர் தம் கட்சி ஆட்களாகவே வேலைக்கு வைத்திருந்ததால் இப்படி அடிக்கடி தகராறுகள் வருவதாக மாண வர்கள் தெரிவித்தார்கள்.

இந்தப் பேச்சு சுவாரஸ்யத்தில் அவர்கள் காண்டீனில் சிறிது நேரம் அதிகமாகத் தாமதித்துவிடவே அடுத்த வகுப்புக்குக் காலந் தாழ்த்திப் போக நேர்ந்தது. அது பேராசிரியர் பூதலிங் கத்தின் பொருளாதார வகுப்பு. அவ ருடைய வகுப்புக்குத் தாமதமாகப் போய் நுழைவது மாணவர்களுக்கே பிடிக்காத காரியம். பாண்டியனும் மற்ற மாணவர்களும் பேராசிரியரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு வகுப் புக்குள் நுழைந்தார்கள். 'கரன்ஸி அண்ட் பேங்கிங்' பற்றி விரிவுரை நடந்து கொண்டிருந்தது. வகுப்பு முடிந்து வெளி யேறும்போது, ''பாண்டி யன்! முடிந்தால் மூன்று மணிக்கு என்னை டிபார்ட்மெண்ட் அறையில் வந்து பார்'' என்று சொல்லிவிட் டுப்போனார்



பேராசிரியர் பூதலிங்கம். பகல் உணவுக்குப் பின் அறைக்குப் போய்ச் சிறிது நேரம் இருந்து விட்டுப் பிற்பகலில் முதல் வகுப்பாகிய தமிழ் வகுப்புக்குப் போனான் பாண்டியன். அன்று முத்து மாணிக்கம் என்ற புது விரிவுரையாளர் வந்தார். வகுப்பை முப்பதாவது நிமிஷத்திலேயே முடித்து மாணவர்களைப் போகச் சொல்லி விட்டு விட்டார் அவர். இரண்டே முக்கால் மணிக்கே 'எகனமிக்ஸ் டிபார்ட்மெண்ட்' மாடிக்குப் போய்ப் பூதலிங்கம் சாரைப் பார்க்க வசதியா யிருந்தது பாண்டியனுக்கு. பேராசிரியர் அவனை அன்போடு வரவேற்று உட்காரச் சொன்னார். பியூனைக் கூப்பிட்டு இரண்டு டீ வாங்கி வரச் செய்து அவனுக்கும் கொடுத்துத் தாமும் குடித்தபின் மெல்லப் பேச்சைத் தொடங்கினார். ''பாண்டியன்! இது நமக்குள்ளே இருக்கட்டும்! என் காதிலே விழுந்ததை உன்னிடம் சொல்லிவிடலாம் என்று தோன்றியது. பட்டமளிப்பு விழாவுக்குள்ளே மாணவர்களில் யார் யார் இயக்கங்களுக்கும், போராட்டங்களுக்கும் காரணமான 'ரிங்-லீடர்'களோ' அவங்களை எல்லாம் ஏதாவது குற்றம் சாட்டி, "சஸ்பெண்ட்" செய்வது; அல்லது போலீஸ் கேஸில் மாட்டி விட்டுப் பட்டமளிப்பு விழா முடிகிற வரை உள்ளே தள்ளிவிடுவது என்ற ஏற்பாட்டில் இங்கே காரியங்கள் இரகசியமாக நடக்கின்றன. நீயும், உன் சகாக்களும் கவனமாக இருக்க வேண்டும். இதைச் சொல்வதற்காகத்தான் வரச் சொன்னேன். நீங்கள் நடத்திய கண்டன ஊர்வலங்களில் பெருவாரியான ஆசிரியர்களைக் கலந்து கொள்ளச் செய்தேன் என்பதனால் என் மேலேயே வி.ஸி.க்கு ரொம்பக் கோபம். எனக்கு ஏதேதோ இடைஞ்சல் பண்ணிக் கொண்டிருக்கிறார். நான் எதற்கும் பயப்படவில்லை. என்றால் அவரைப் போல் கண்ணெதிரே நடக்கும் அக்கிரமங்களைப் பார்த்துக் கொண்டு மரக் கட்டையாக இருக்க முடியாது.....''

பாண்டியன் அவருடைய அன்பான எச்சரிக்கைக்காக அவருக்கு நன்றி தெரிவித்தான். மேலும் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு அடுத்த வகுப்புக்குப் புறப்பட்டான் அவன். பிற்பகலில் மாணவ நண்பர்கள் சிலரையும் அழைத்துக் கொண்டு அண்ணாச்சி கடைக்குச் சென்று பேராசிரியர் பூதலிங்கம் கூறிய எச்சரிக்கையைத் தெரிவித்துக் கலந்தாலோசித்தான் அவன். நண்பர்கள், ''எது வந்தாலும் கவலை இல்லை. அநீதிகளை எதிர்த்தே ஆகவேண்டும்'' என்றார்கள். அன்று விடுதியில் மாணவர்களுக்கு வாராந்தர 'ஃப்ரீ நைட்' ஆகையால் முக்கால்வாசி மாணவர்கள் வெளியே திரைப்படம் பார்க்க வந்திருந்தார்கள். பேச்சுப் போக்கில் நேரம் அதிகம் ஆகிவிட்டதனால் பாண்டியன் அண்ணாச்சி கடையிலேயே தங்கி



விட்டான். மறு நாள் காலை ஆறு மணிக்கே எழுந்து அவன் விடுதி அறைக்கு வந்தபோது லேடீஸ் ஹாஸ்டலிலிருந்து ஃபோன் வந்ததாக அறை நண்பன் பொன்னையா கூறினான்.

கண்ணுக்கினியாள்தான் ஃபோனில் கூப்பிட்டிருக்க முடியும் என்ற அநுமானத்தோடு பாண்டியன் வராந்தாவுக்குச் சென்று லேடீஸ் ஹாஸ்டலுக்கு ஃபோன் செய்தான். நல்லவேளையாக அவன் கூப்பிடுவதை எதிர்பார்த்து அவள் ஃபோன் அருகிலேயே இருந்தது வசதியாகப் போயிற்று. தான் மாணவி பத்மாவின் வீட்டுக்குப் போய் அவளோடு சேர்ந்து பஸ்ஸில் புறப்பட்டு வருவதாகவும், பஸ் டெர்மினஸ் அருகே காத்திருக்க வேண்டும் என்பதை ஞாபகப்படுத்தவே அவனுக்கு



## சத்திய வெள்ளம்

**''நிதானம் அளவு மீறினால் அதுவே மந்தம். வீரம் அளவுமீறினால் அதுவே முரட்டுத்தனம். இலட்சியம் அளவு மீறினால் அதுவே அலட்சியம். பிரியம் அளவு மீறினால் அதுவே பேராசை என்றுதான் சில தொடக்கங்களுக்கு முடிவுகளே ஏற்பட முடியும்.''**

ஃபோன் செய்வதாகவும் அவள் கூறினாள். அதோடு அன்றிரவு ஃபைன் ஆர்ட்ஸ் ஃபேகல்டியில் உள்ள லிட்டில் தியேட்டரில் 'டிப்ளமா இன் டிராமா' பிரிவில் படிக்கும் மாணவ மாணவிகளுக்குச் சில விளக்கங்கள் தருவதற்காக ஒரு கதகளி நாடகமும், ஒரு குறஞ்சி நாடகமும் நடக்க இருப்பதாகவும், குறவஞ்சி நாடகத்தில் தான் குறத்தியாக நடிக்க இருப்பதாகவும் சொல்லி அவன் அதற்கு வரவேண்டும் என்றாள் அவள். அவன் மகிழ்ச்சியோடு அதற்கு இசைந்தான். காலை ஒன்பதே முக்கால் மணிக்கு பஸ் டெர்மினஸ் அருகே மாணவர்களோடு காத்திருப்பதாகவும் கூறினான். அவள் ஃபோனை வைத்தாள். அவன் அவளோடு பேசி முடித்த மன நிறைவுடன் குளிப்பதற்காகப் போனான். ஏழரை மணிக்கு அவனும் பொன்னையாவும் சேர்ந்துபோய் மெஸ்ஸில் சிற்றுண்டியை முடித்துக் கொண்டு வந்தார்கள். மெஸ் வாசலிலேயே 'ஒன்பதே முக்கால் மணிக்கு பஸ் டெர்மினஸில் வந்து நிற்க வேண்டும்' என்பதைக் காதும் காதும் வைத்தாற்போல் பல மாணவர்களுக்குச் சொல்லிவிட்டார்கள் அவர்கள். பாண்டியனும் பொன்னையாவும் அறைக்குத் திரும்பி அவரவர் பாடங்களை ஒரு மணி நேரம் படித்தார்கள். இடீரென்று தான் பல்கலைக்கழக நூலகத்திலிருந்து எடுத்து வந்திருந்த 'ஆங்ரி யங் மென்' என்ற புத்தகத்தைப் பிரித்து அதன் முன்னுரையில், ''எதிலும் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை அதிகமாயிருக்கும் முதியவர்கள் நிறைந்த சமூகத்தில் எதிலும் பிடிவாதம் அதிகமாயிருக்கும் இளைஞர்கள் உருவாவதைத் தவிர்க்க முடியாது. அந்தப் பிடிவாதமே இந்த நூற்றாண்டின் வரப்பிரசாதம்'' என்ற பொருள்படும் ஆங்கில வாக்கியங்களைப் பாண்டியனிடம் சுட்டிக்காட்டினான் பொன்னையா.

''இந்தப் புத்தகம் எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு பாண்டியன்! நீயும் படி.... அப்புறம் திருப்பிக் கொடுக்கலாம்'' என்றான் அவன்.

''இதை இந்தப் புத்தகத்திலிருந்துதான் தெரிஞ்சுக்கணுமா பொன்னு? ரொம்ப நாளா மணவாளன் இதை என்னைப் பார்க்கறப்ப எல்லாம் சொல்லிக்கிட்டிருக்காரு. நிதானம் அளவு மீறினால் அதுவே மந்தம். வீரம் அளவு மீறினால் அதுவே முரட்டுத்தனம். இலட்சியம் அளவு மீறினால் அதுவே அலட்சியம். பிரியம் அளவு மீறினால் அதுவே பேராசை என்றுதான் சில தொடக்கங்களுக்கு முடிவுகளே ஏற்பட முடியும்'' என்று ஆரம்பித்துப் பேசத் தொடங்கிய பாண்டியன் கடிகாரத்தைப் பார்த்துவிட்டு, ''நேரமாச்சு! புறப்படு, போகலாம்'' என்று சட்டையை மாட்டிக்கொண்டு கிளம்பத் தயாரானான். அவனும், பொன்னையாவும் மற்றும் சில மாணவர்களும் பஸ் டெர்மினஸுக்குப் போய்ச் சேர்ந்தபோது ஏற்கெனவே சொல்லி வைத்திருந்தபடி நிறைய மாணவர்கள் அங்கே கூடியிருந்தார்கள். ஒன்பது ஐம்பத்தைந்துக்கு வரவேண்டிய நேரத்துக்கு ஐந்து நிமிஷம் முன்னதாகவே அந்த பஸ் வந்தது. எல்லாக் கூட்டமும் பஸ்ஸைச் சூழ்ந்து கொண்டது. கண்ணுக்கினியாளும் அந்த மாணவி பத்மாவும் இறங்கினார்கள். நடந்ததைப் பாண்டியனிடம் கண்ணுக்கினியாள் சுருக்கமாகச் சொல்லி இரண்டொரு சக பிரயாணிகளையும் கூப்பிட்டுச் சாட்சியத்தோடு அதை நிருபித்தான். உடனே மாணவர்கள் அந்த பஸ்ஸின் கண்டக்டர் டிரைவரை வளைத்

# தடுமாறாமல் நொடியில் கிளம்புங்கள்

## மற்றவர்களைவிட முன்னால் இருங்கள் — எப்பொழுதும்



கூடுதலான சக்தியைதரும்

# ஆம்கோ பாட்டரியுடன்




மிடுக்கு தேவை. காரியத்தைச் சாதிக்க கிளம்புகையில் தடுமாறி சங்கடப்படாதீர்கள். ஒரு பாட்டரி வாங்க எண்ணம் பெறும்போது, 'கூடுதலான சக்தியை தரும்' ஆம்கோ பாட்டரியைத் தவிர வேறு எதையும் சட்டை செய்யாதீர்கள். பாட்டரி கோளாறு என்ற பிரச்னையை நீங்கள் மறந்து விடலாம். கார் ஓட்டுவதை இன்பகரமானதாக ஆக்கிக் கொள்ளுங்கள்.

ஒவ்வொரு ஆம்கோ பாட்டரியும் — உங்களுடைய பாட்டரிக்கு மிகவும் தேவையான அந்த வலுவையும், நீண்ட ஆயுளையும் அளிக்க — நவீன ஆராய்ச்சி அபிவிருத்தி, சிறப்பான என்ஜினீரிங் திறன், கடுமையான தரக்கட்டுப்பாடு, கிட்டத்தட்ட 40 வருட கால அனுபவம் ஆகியவற்றால் ஆனது.

**ஆம்கோ பாட்டரீஸ் லிமிடெட்,**

யூனிடி பில்டிங்ஸ், பெங்களூர்-2.

MAC (B) AM-97 TAM

துக் கொண்டு மாணவிகளிடம் தவறாக நடந்து கொண்டதற்காக மன்னிப்புக் கேட்கும்படி அவர்களைக் கோரினார்கள். டிரைவர் கொஞ்சம் நல்லவிதமாகப் பேசினான். கண்டக்டரை மன்னிப்புக் கேட்கச் சொல்லி வற்புறுத்தினான்.

''நானே அடிக்கடி சொன்னப்பல்லாம் நீ கேட்கலே! பாஸஞ்சர்கிட்டே துடுக்காப் பேசாதே! அடக்கமா வேலையைப் பாருன்னுக் கேட்கமாட்டே....'' என்று கண்டக்டரைக் கண்டித்தான் அவன். டிரைவர் இப்படிக் கண்டித்ததும் கண்டக்டர் அவனையும் திட்டத் தொடங்கினான். தூரத்தில் நின்றிருந்த வேறு பஸ்களின் கண்டக்டர்கள் சிலரும் கூடி ஒன்று சேர்ந்து வந்தார்கள். இந்த நிலையில் பாண்டியன் சமயோசிதமாக ஒரு காரியம் செய்தான். ''இனிமேல் இது எங்கள் பிரச்னை! நாங்கள் பார்த்துக் கொள்கிறோம். நீங்கள் எல்லாரும் வகுப்புக்களுக்குப் போகலாம். தயவு செய்து இங்கே நிற்க வேண்டாம்'' என்று கூறிக் கண்ணுக்கினியாள் முதலிய மாணவிகளை அங்கிருந்து பத்திரமாக அனுப்பி வைத்தான். ஒரு கலகம் மூளுவதைத் தவிர்க்க முடியாது போலிருந்தது. ''சாயங்காலம் நாடகம் ஞாபகமிருக்கட்டும்'' என்று போகும்போது கூடக் கண்ணுக்கினியாள் சொல்லிவிட்டுப் போனாள். பாண்டியன் மாணவிகளை அனுப்பிவிட்டுத் திரும்பி வருவதற்குள்ளேயே மற்ற மாணவர்களுக்கும் பஸ் ஊழியர்களுக்கும் பேச்சு வார்த்தை தடித்துவிட்டது. ''நீங்கள்ளாம் அக்கா தங்கச்சிகளோடதானே பொறந்திருக்கீங்க?...'' என்று சூடாகக் கேட்டான் ஒரு மாணவன். மாணவிகளிடம் தவறாக நடந்து கொண்ட கண்டக்டர் அதற்குத் துடுக்காக ஏதோ பதில் சொன்னான். அதற்குள் பாண்டியன் நடுவில் பாய்ந்து இரு சாராரையும் தடுத்து, எல்லா மாணவர்களையும் அந்த பஸ்ஸில் ஏறச் சொன்னான். மாணவர்கள் ஏறிக் கொண்டார்கள். ''இந்தாப்பா! நாங்க ஓசிப் பயணம் செய்கிறோம்னு நினைக்காதே. எல்லாருக்கும் டிக்கெட் கொடு. நேரே உங்க முதலாளி வீட்டுக்கு விடு! நாங்களே அவரிடம் மானம், மரியாதை, மதிப்பைப் பற்றிப் பேசிக்கிறோம். உங்ககிட்டப் பேசிப் பிரயோசனம் இல்லை'' என்று இரண்டு பத்து ரூபாய் நோட்டுக்களை நீட்டினான். கண்டக்டர் அதை வாங்காமல் காறித் துப்பிவிட்டு நடந்தான். ஆனால் டிரைவர் கொஞ்சம் நிதானமாகவே நடந்து கொண்டு பஸ்ஸுக்குச் சேதமில்லாமல் காக்க விரும்பினான். கண்டக்டர் இல்லாமலே பஸ்ஸை எடுத்தான் அவன். வாக்குவாதம் நீடித்ததனால் டிரைவர் பஸ்ஸை எடுக்கும்போதே பத்தேமுக்கால் மணி ஆகிவிட்டது. பஸ் நிறைய எண்பது மாணவர்களுக்கு மேல் திணித்துக் கொண்டு நின்றார்கள். மாணவிகளிடம் தவறாக நடந்து கொண்ட பஸ் ஊழியர்களுக்கு எதிராகக் கோஷங்கள் முழக்கப்பட்டன. ஆத்திரம் அடைந்த சில மாணவர்கள் டிரைவர் ஸீட்டின் மேலே வைக்கப்பட்டிருந்த மல்லை இராவணசாமியின் படத்தை உடைக்க முயன்றபோது பாண்டியன் தடுத்தான். மாணவர்கள் கட்டுப்பட்டனர். ''இதுவே நம் நோக்கமல்ல! நியாயம் கேட்கப் போகிறபோது நாமே அநியாயங்களைச் செய்து கொண்டு போனால் நம் தரப்பில்தான் பலவீனங்கள் அதிகமாக இருக்கும்'' என்று அவன் கூறியபோது மாணவர்கள் சிலருக்கு அவனது நிதானம் எரிச்சலூட்டினாலும் அவன் வார்த்தையை அவர்களால் மீற முடியவில்லை. அவனுக்காக அவர்கள் பொறுமையைக் கடைப்பிடித்தார்கள்.

பஸ் மல்லை இராவணசாமியின் பங்களா காம்பவுண்டுக்குள் நுழைந்து நிற்கிறபோது மணி பதினொன்றேகால். டிரைவர் பஸ்ஸை நிறுத்திவிட்டுக் கீழே இறங்கிக் கூர்க்காவிடம் ஏதோ சொல்லி உள்ளே அனுப்பினான். கூர்க்கா உள்ளே போய்விட்டுத் திரும்பி வந்து டிரைவரிடம் சொன்ன பதிலைக் கேட்டு அவன் முகம் சுருங்கியது. ''கொஞ்சம் பொறுத்துக்குங்க! நானே போய் ஐயாவைப் பார்த்துக் கேட்கிறேன்'' என்று

டிரைவரே உள்ளே போனான். அதை யடுத்து உள்ளே மல்லை இராவணசாமி யின் குரல் இரைந்து கூப்பாடு போடுவது வெளியேயும் கேட்டது. டிரைவர் திரும்பி வந்து ''அவரு உங்களைப் பார்க்க முடியா தாம்!'' என்று எரிச்சலோடு பாண்டிய னிடம் சொன்னான். உடனே பாண்டி யன் மற்ற மாணவர்களைப் பார்த்து, ''மாணவர்களே! அவர் நம்மை மதித் துப் பார்த்து நாம் சொல்வதைக் கேட் கிறவரை எவ்வளவு நேரமானாலும் இங் கிருந்து நாம் நகரக் கூடாது'' என்று இரைந்து சொன்னான். மணி பன்னி ரண்டாயிற்று. ஒன்று, இரண்டு என்று பகல் நெடுநேரமாகியும் மாணவர்களும் நகரவில்லை. எம். எல். ஏ. யும் வெளியே வரவில்லை. மூன்று மணிக்குக் கூர்க்கா வந்து மாணவர்களை வெளியேறச் சொல்லிக் கத்திக் கூப்பாடு போட் டான். மாணவர்கள் அசையவில்லை. கோஷங்களை முழக்கினார்கள். பசி தாகத் தைப் பொருட்படுத்தாமல் எண்பது மாணவர்கள் அங்கே மறியல் செய்து கொண்டிருந்த செய்தி பல்கலைக்கழகத் துக்கு எட்டியதால் மேலும் மாண வர்கள் கூட்டம் கூட்டமாக வரத் தொடங்கி யிருந்தார்கள். ''உங்கள் பஸ் ஊழியர்களைத் தயவுசெய்து மாண வர்களிடமும், பொதுமக்களிடமும் மரி யாதையாக நடந்து கொள்ளச் சொல் லுங்கள். அது போதும்'' என்று தாங்கள் வேண்டப் போகிற ஒரு வேண்டுதலைக் கேட்கக்கூட மறுக்கும் அளவு மல்லை இராவணசாமி முரண்டு பிடிப்பதை மாணவர்கள் வெறுத்தனர். மாணவர்களைச் சந்தித்துப் பேசிச் சமரசமாகப் போக முடியாமல் வறட்டு ஜம்பம் அவரைத் தடுத்தது. போலீ ஸுக்கு ஃபோன் செய்து மாணவர்கள் தம் வீட்டில் 'டிரஸ்பாஸ்' செய்திருப்ப தாகப் புகார் கொடுக்கவும் தயக்கமாக இருந்தது. அதனால் மாணவர்களை மேலும் விரோதித்துக் கொள்ள நேருமோ என்று பயமாகவும் இருந்தது. துணை வேந்தருக்கு ஃபோன் செய்தார் இராவணசாமி. துணைவேந்தர் ஃபோனில் கிடைக்கவில்லை. பல்கலைக் கழகத்தில் பதிவாளர் மட்டுமே இருந்தார். அவ ரிடம் துணைவேந்தர் வந்ததும் தமக்கு ஃபோன் செய்யச் சொல்லும்படி தகவல் தெரிவித்த இராவணசாமி பேசாமல் கொல்லைப்புற வழியாக வெளியேற லாமா என்றுகூட நினைத்தார். இருட் டிய பின்னும் மாணவர்கள் விடவில்லை. மாலையில் மேலும் மாணவர்கள் அதிக மான அளவு வந்து சேர்ந்து கொண்ட தால் பங்களா காம்பவுண்டில் கூட்டம் முன்னைவிட அதிகமாகி இருந்தது. அவ்வளவு பெரிய கூட்டம் உணர்ச்சி வசப்பட்டு பஸ்ஸுக்கு நெருப்பு வைத்து விடுமோ என்றுகூடத் தாமதமாகக் கற் பனை செய்து பயந்து நடுங்கினார் அவர்.

**மா**லை ஆறரை மணிக்கு நுண் கலைப் பிரிவின் அரங்கில் குறவஞ்சி நாடகத்துக் காக மேக்அப் போட்டுக் கொள்ளப் போகிறவரை பாண்டியனை எதிர்பார்த் துக் காத்திருந்த கண்ணுக்கினியாளுக்கு அவன் வராதது ஏமாற்றத்தையும், கவலையையும் அளித்தது. அவள் கிரீன் ரூமில் இருந்தபோது சக மாணவி ஒருத்தி வந்து நிலைமையைத் தெரிவித்தாள். பக்கத்தில் கதகளி ஆட்கள் வேறு நின்று கொண்டிருந்தார்கள். அவள் மனம் நாடகத்தில் லயிக்கவே இல்லை. முதலில் அவளது குறவஞ்சி நாடகம் தான் நடக்க வேண்டி யிருந்தது. மாணவர்களும், பாண்டியனும் மல்லை இராவணசாமி வீட்டில் மறியலில் இருக்கிறார்கள் என்ற செய்தியை அறிந்ததும் அவள் மனம் நிம்மதி இழந் திருந்தது. அவளால் நிறைவாக நடிக்க முடியவில்லை. பத்து நிமிஷம் மேடை யில் தோன்றி ஆடிப்பாடிக் குறி சொல்லிக் குறத்தியாக நடித்தாள். அப்புறமும் உடனே அங்கிருந்து கத் திரித்துக் கொண்டு புறப்பட முடிய வில்லை. அவளுடைய நாடகக் கலைப் பிரிவுப் பேராசிரியர் கருணாகரமேனன் தான் இதற்கு ஏற்பாடு செய்தவர். அவர் முன்னிலையில் குறவஞ்சி நாடகம் முடிந்ததும், கதகளியைப் பார்க்காமல் அவள் வெளியேறுவது என்பது முடி யாமல் இருந்தது. மேக் அப்பைக் கலைத்துவிட்டு வழக்கமான கோலத் தோடு முன் வரிசையில் அமர்ந்து கதகளி முடிகிற வரை இருந்து பார்த்தாள் அவள். வகுப்பின் பாடங்களில் 'தென் னிந்திய நாடகங்கள் — தொடக்க நிலை' என்ற பிரிவின் கீழ் நடைமுறைப் பாட மாக இந்தக் குறவஞ்சியும், கதகளியும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்ததன் கார ணத்தால் இறுதிவரை இருந்துவிட்டுப் போக வேண்டிய நிர்ப்பந்தத்திலிருந்து அவள் மீள முடியவில்லை. நிகழ்ச்சி முடிந் ததும் ஃபைன் ஆர்ட்ஸ் டிபார்ட்மெண்ட் புரொபஸர் அறையிலிருந்தே அண் ணாச்சி கடைக்கு ஃபோன் செய்தாள் அவள். கடை மூடியிருப்பதாகச் சொல்லி மருந்துக் கடையில் ஃபோனை வைத்துவிட்டார்கள். கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போலிருந்தது அவ ளுக்கு. உடனிருந்த மற்றவர்கள் தனது பரபரப்பைப் புரிந்து கொள்ளாமல் காப் பது அப்போது அவளாலேயே முடியா ததா யிருந்தது. (தொடரும்)





1, 2. சென்னை எழும்பூர் சுதந்திரக் கட்சியின் அரசியல் மகாநாடு தமிழ்நாடு சுதந்திரக் கட்சித் தலைவர் திரு ஜி. கே. சுந்தரம் தொடங்கி வைக்க, திரு ஜி. சுவாமிநாதன் எம். எல். ஸி. தலைமை வகிக்க, அமைந்தகரையில் டிசம்பர் 17 ந் தேதி நடைபெற்றது. விழாவில் டாக்டர் ஹாண்டே, டாக்டர் சந்தோஷம், ஸ்ரீ ஸ்ரீகுமார் ஆகியோரும் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.



3. பாரதீய வித்யாபவனின் லண்டன் கேந்திரத்துக்கு லார்ட் மவுண்ட்பாட்டன் பிரதம போஷகராக இருக்கச் சம்மதித்திருக்கிறார். லார்ட் பாயில், லார்ட் தாம்ஸன், லார்ட் ஹேர்வுட், ஸர் ஜான் பிரெளன், லேடி போமன்ஜி ஆகியோர் போஷகர்களாக இருக்கிறார்கள். கலாசாரப் பரிவர்த்தனைக்கு உதவ ஏற்பட்ட இந்தக் கேந்திரம் தனது போஷகர்களில் ஒருவரான லார்ட் தாம்ஸனுக்குக் குத்துவிளக்குப் பரிசளித்தது. படத்தில் விளக்கேற்றுகிறார் லார்ட் தாம்ஸன்.



4. கோயம்புத்தூர் ஸ்ரீ தியாகராஜ சங்கீத சபா ஒரு புதுமைப் புரட்சி செய்திருக்கிறது. சென்னையில் கிளை சபா தொடங்கியிருக்கிறது. அண்மையில் ஸ்ரீமதி மதுபென் ஷா சென்னைக் கிளையைத் தொடங்கி வைத்தார்.




5. பத்மா சேஷாத்திரி பால பவன் மெட்ரிகுலேஷன் பள்ளிக்கூட மாணவர்கள் இந்தியன் பாங்கு அதிகாரிகளின் ஒத்துழைப்புடன் தங்கள் பள்ளியில் பாங்குகள் நடத்தப்படும் விதம் பற்றிய கண்காட்சி நடத்தினார்கள். கண்காட்சி என்று பேர்தானே ஒழிய மாணவர்களின் உற்சாகம் அசல் வங்கியையே நடத்திக் காட்டி விட்டது! சேமிப்பினால் ஏற்படும் நன்மைகள் பற்றிய மாணவர்களின் விளக்க உரைகள் பல புதிய கணக்குகள் ஆரம்பிக்கப்படக் காரணமாய் இருந்தன. ●



# 'காந்தீயப் பல்கலைக் கழகம்'

நமது விசேஷ நிருபர்

தார் போட்ட பிரதான சாலையிலிருந்து கப்பி ரோட்டில் திரும்பியது மோட்டார் வேன். சற்றுத் தூரம் போனதும் மீண்டும் ஒரு திருப்பம். குண்டும் குழியும் சேறும் சகதியுமாக உள்ள அந்தப் பகுதியில் ''யூனிஸெஃப்'' அன்பளிப்பாகிய அந்த மோட்டார் வேன் படாதபாடு பட்டது. 'பிரிட்டனில் வழு வழுப்பான சாலைகளில் அலுங்காமல் நலுங்காமல் ஓட வேண்டிய வண்டி, பாவம்!' என்று நினைத்துக் கொண்டேன். சேற்றில், 'இதோ சிக்கிக் கொண்டேன்' என்று பயமுறுத்தியது அது. 'இல்லை, இதோ விடுபட்டு விட்டேன்!' என்று உற்சாகத்துடன் பாய்ந்தது. ஒரு கிராமத்தில் நுழைந்து அதன் மறு எல்லையை அடைந்தோம். அத்தனை குலுக்கலுக்கு இடையிலும் வெற்றிலை போடுவதை வெற்றிகரமாக நிறைவேற்றிய கிருஷ்ணமூர்த்தி, புகையிலையை வாயில் அடக்கிக் கொண்டு இறங்கினார்; நடந்தார். நானும் வேறுவழியின்றிப் பின்தொடர்ந்தேன். அரை மைல் சென்றதும் ஓர் ஆறு குறுக்கிட்டது. கிருஷ்ணமூர்த்தி வேட்டியை மடித்துக் கட்டினார். செருப்பைக் கையில் எடுத்துக் கொண்டு நீரில் இறங்கி நடந்தார். 'இதென்னடா வம்பு?' என்று எண்ணிய படியே அவரை நான் காப்பி அடித்தேன். நல்ல வேளை! முழங்கால் மட்ட ஆழம்தான். அப்பால் கரையேறியதும் ஒரு சோளக் கொல்லை வரப்பு மீதாக நடந்தார், நடந்து கொண்டேயிருந்தார். மெல்லிய கயிறு மீது நடக்கும் சர்க்கஸ் பெண்மணி போல் நான் அந்த வரப்பு மீது வித்தை புரிய நேர்ந்தது! வெய்யில் ஏறிக்கொண்டேயிருந்தது!

நல்ல வேளை, என் சோர்வை மேலும் சோதிக்காமல் திரு கிருஷ்ணமூர்த்தி, ''இதோ பார்த்தீர்களா?'' என்றார்.

பக்கச் சுவர் ஒன்றும் எழுப்பப்படாத அகன்ற கிணறு, 'ஆ' என்று பிளந்து கிடக்கும் அசுரனின் வாய் போல் தோற்றமளித்தது. கோரைப் பல் போல் அதன் விளிம்பில் கவலைக் கம்பங்கள் நீண்டன.

''சரி, பார்த்தேன். இந்தக் கிணற்றில் என்ன விசேஷம்?'' என்றேன்.

''இப்போ ஒரு விசேஷமும் இல்லே. ஆனால் நான் முதல் தடவையாக இங்கு வந்தபோது பெரிய விசேஷம் இருந்தது'' என்றார் அவர். ''அதோ அந்தக் 'கவலை' ஏற்றத்தில் ஒருவன் நீர் இறைத்துக் கொண்டிருந்தான். அந்தப் பக்கம் ஓர் இளம் பெண் இடுப்பில் குடத்துடன் நின்று கொண்டிருந்தாள். பத்து நிமிஷம், இருபது நிமிஷம், அரை மணி ஆயிற்று. அவன் அவளைத் தண்ணீர் எடுக்க விடுவதாகத்







இந்தப் பக்கம்:

☐ 'சௌபாக்கிய'த்தில் பிரார்த்தனை

☐ காந்தி கிராமத்தின் ஆராய்ச்சிப் பணிக்கு அமெரிக்க அரசின் உதவியை வழங்குபவர் டாக்டர் ஸ்பிராங்க்லின். பெறுபவர் திரு ஜி. ராமச்சந்திரன்

எதிர்ப்பக்கம்:

☐ குடி நீர்ப் பஞ்சம் இனி இல்லை. காந்தி கிராமப்பணிகளுள் ஒன்று

☐ கஸ்தூரிபா மருத்துவ மனை

☐ கிராம மக்களுக்குச் சுகாதாரவசதி களைப் பற்றிய விளக்கப் பிரசாரம்



தோன்றவில்லை. நான் பொறுமை இழந்து' 'ஏனப்பா, அந்தப் பெண்ணுக்குக் கொஞ்சம் நீர் கொடுத்து அனுப்பப்படாதா ? எத்தனை நேரமாகக் காத்திருக்கு?' என்றேன். அவன் அளித்த பதில் என்னைத் தூக்கிவாரிப் போட்டது! — அவள் கீழ் ஜாதிப் பெண்ணும். ஹரிஜனும். அவள் இந்தக் கிணற்று நீரை உபயோகித்தால் பயிர் கருகி விடுமாம்!''



''என்ன ஸார்! ஹைதர் காலத்துக் கதையெல்லாம் அளக்கறீங்க ?''

''ஆமாம். உங்களால் நம்பமுடியாதுதான். எனக்கு இந்த அனுபவம் ஏற்பட்டது 1968ல்! இன்றும்கூட இது போன்ற காட்சிகளைப் பல கிராமங்களில் காணலாம்.''

'ஏதோ அமெரிக்காவில் நிற வெறி, ஆப்பிரிக்காவில் இன வெறி' என்று அட்ட-



காசமாகப் பேசுகிறோமே. இங்கு என்ன வாழ்ந்ததாம்?' என்று நினைத்துக் கொண்டே அவரோடு நடந்தேன்.

வரிசை வரிசையான சிறு வீடுகள். பளிச்சென்று வெள்ளை பூசிய சுவர்கள். மேலே மங்களூர் ஓடு வேயப்பட்ட கூரைகள். ஒரு பக்கம் சிறு குழந்தைகள் விளையாடவும் அடிப்படைக் கல்வி கற்கவும் நீண்டதொரு கூடம். அதன் ஒரு மருங்கில் மதிய உணவு தயாரிக்கச் சமையல் அறை. அப்பால் ஹரிஜனங்களுக்கென்று புத்தம் புதியதொரு கிணறு. (நீர் நன்று இருக்கிறதென்று இப்போது ஜாதி இந்துக்கள்கூட அதில் நீர் எடுக்கிறார்களாம்!) வீடுகளின் உள்ளேயும் தெருவும் துப்புரவாக இருந்தன. ஒரு

திண்ணையில் ஜுரம் என்று படுத்திருந்த கிழவியைத் தவிர மற்றவர்கள் கண்களில் ஆரோக்கிய ஒளி பளிச்சிட்டது.

"ஹரிஜனங்கள் ரொம்பவும் கடன் பட்டிருந்தார்கள். வட்டி அவர்களை அடிமைகளாக்கிக் கொண்டிருந்தது. அவர்கள் கடனை நாங்கள் திருப்பிக் கொடுத்துவிட்டுக் கலபத் தவணைகளில் திரும்பப் பெற்றோம். கிராமப் புனருத்தாரணத்தில் கிராம மக்களே பங்கு பெற வேண்டும்; எல்லாவற்றையும் நாங்களே செய்துவிட்டது போலிருக்கக் கூடாது. ஆகவே வீடுகளுக்கு வரிசை வரிசையாக அவர்களையே சுவர் எழுப்பச் சொன்னோம். கூரைகள் வேய்வதை எங்கள் பணியாகக் கொண்டோம். இதற்கு இரண்டு ரூபாய் மாத வாடகை வாங்குகிறோம். சுத்தமாக இருக்கவும் எளிய உணவானாலும் அதன் சத்து குறையாத விதத்தில் ருசிகரமாகச் சமைக்கவும் கற்றுத் தருகிறோம்......"

"இந்த முன்னேற்றமெல்லாம் ஒரு பக்கம் இருக்கட்டும்; இந்த இடத்தில் இப்படி ஒரு கிராமம் ஒளிந்து கொண்டிருப்பதைக் கண்டு பிடித்தீர்களே, அதுவே ஒரு சாதனைதான்!" என்றேன்.

"கிழிந்த துணியைத் தைத்துக் கொள்ளக் கூடத் தெரியாத ஆதிவாசிகள் சிலர் சிறுமலை அடிவாரத்தில் இருந்தார்கள். அவர்கள் இன்று எப்படி மாறிப் போயிருக்கிறார்கள் என்று காட்டுகிறேன். வாருங்கள்" என்ற கிருஷ்ணமூர்த்தி வேட்டியை மடித்துக் கட்டிக் கொண்டு சோளக் கொல்லை வழியே நடந்து கையில் செருப்பைத் தூக்கிக் கொண்டு ஆற்றில் இறங்கிவிட்டார்.

* * *

காந்தி கிராமத்தின் ஓர் அங்கமாக, கிராம மக்களின் ஆரோக்கியம், குடும்பக் கட்டுப்பாடு ஆகியவற்றில் கவனம் செலுத்த ஏற்பட்டுள்ள நிறுவனம் Gandhigram Institute of Rural Health and Family planning. பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்பது போல இந்நிறுவனம் செய்து வரும் பணிகள் சிலவற்றை விளக்க மேற்படி சம்பவத்தை விவரித்தேன். குழந்தைகளுக்கும் பெரியோருக்கும் மலிவான புரதச் சத்துணவு, நோய் தடுப்பு, கிராமப் பொருளாதார வளர்ச்சி, குழந்தை வளர்ப்பு, ஆரோக்கியம், சுகாதாரம் போன்ற பல துறைகளில் பிரசாரம் செய்வது மட்டுமல்ல; புள்ளி விவரக் கணக்கெடுத்து, விரிவான ஆராய்ச்சிகள் நடத்தி, தாம் கண்ட முடிவுகளால் நாட்டின் பிற பகுதிகளும் பயனடையச் செய்து வருகிறார்கள். கிராம மக்களுக்குக் குழந்தை பிறந்தாலோ அல்லது வீட்டில் ஒருவர் இறந்தாலோ அரசாங்கத்துக்கு அவ்விவரம் தெரிவிக்கப்பட வேண்டும் என்று கூடத் தெரியாது. குழந்தைகளுக்கு ஒரு முறை தடுப்பு ஊசி போட்டுக் கொண்டு சென்றவர்கள் மேலும் இரு முறை தடுப்பு ஊசி போட்டுக் கொள்ள மாதாந்திர இடைவெளியில் வரவேண்டும் என்பதை அறியார்கள். இவற்றை யெல்லாம் கற்றுத் தரவும் கிராம மக்களுக்கு உதவவும் பிரசாரகர்களையும், சுகாதார மேற்பார்வையாளர்களையும், நர்ஸ்களையும், பிரசவம் பார்க்கும் தாதிகளையும் இந்நிறுவனம் பயிற்சி அளித்துத் தோற்றுவிக்கிறது.

'அடேயப்பா! இத்தனை பணிகளைப் புரியும் இது ஒரு பெரிய நிறுவனம்தான்' என்று தோன்றுகிறதல்லவா? ஆனால் இது காந்தி கிராமத்தின் ஓர் அம்சம்தான். இது போன்ற பல பெரிய நிறுவனங்களைக் கொண்ட காந்தி கிராமத்தை ஒரு காந்திய 'பல்கலைக் கழகம்' என்று வர்ணிப்பதுதான் பொருத்தமாகும். இதில் அநாதைக் குழந்தைகளுக்கான 'சௌபாக்கியம்' என்ற ஆசிரமம் தொடங்கி விவசாயக் கல்லூரி வரையில் முப்பதுக்கு மேற்பட்ட நிலையங்கள் உள்ளன.

திண்டுக்கல்லிலிருந்து பன்னிரண்டு மைல் தொலைவில் நானூறு ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ள இந்தப் பல்கலைக் கழகம் தோன்றிய வரலாற்றினை அறிய ஸ்ரீமதி சௌந்தரம் ராமச்சந்திரன் அவர்களை அணுகினேன். திரு டி. வி. சுந்தரம் அய்யங்காரின் மகளாகப் பிறந்த சௌந்தரம், டில்லி மருத்துவக் கல்லூரியில் படித்து முதல் வகுப்பில் தேறியவர். டாக்டர் சுசீலா நய்யார் இவரது கல்லூரித் தோழி. அப்போதே காந்திஜியிடம் அறிமுகமும் பரிச்சயமும் ஏற்பட்டுவிட்டன.

"அந்த நாளிலேயே கதர் உடுத்துவீர்களா?" என்று கேட்டேன்.

"எனது முதல் சித்தாடையே கதர்தான்" என்று மறுமொழி கிடைத்தது. "என்னைக் காந்திய நெறியில் ஈடுபாடு கொண்டு சமூகத் தொண்டாற்ற ஊக்குவித்ததெல்லாம் என் தாயார்தான். அவள் அந்த நாளிலேயே பத்து கெஜம் கதர்ப் புடவையை உடுத்திச் சுமக்க முடியாமல் சுமப்பாள்" என்றார் சௌந்தரம்.

சென்னை பாப்பாஞ்சாவடியில் அவ்வை கிராம மருத்துவ சேவை நிலையம் என்ற அமைப்பினை நிர்வகித்து அதில் வைத்தியப் பணி புரிந்து வந்தார் ஸ்ரீமதி சௌந்தரம்ராமச்சந்திரன். ஆயின் காந்தியக் கோட்பாடுகளுக்கு ஏற்பக் கிராமப் பகுதியில் சென்று தொண்டாற்ற விரும்பினார். நல்லதோர் இடத்தைத் தேர்ந்தெடுக்கத் தமிழகம் முழுவதும் சுற்றினார். சிறுமலை அடிவாரம் உகந்த இடமாகத் தோன்றியது. ஒரு பக்கம் கொடைக்கானல் மலையின் அழகு, மறுபுறம் சிறுமலையின் எழில். கடினமான கோடையிலும் இதமான சூழல் நிலவச் செய்யும் கணவாய்க் காற்று. அருகேயுள்ள சின்னாளப்பட்டி கிராமத்தைச் சேர்ந்த சிலர், "நாங்கள் இருபத்தைந்து ஏக்கர் நிலம் தருகிறோம், கட்டிட வேலைகளை மேற்பார்வையிடுகிறோம்" என்றெல்லாம் முன்வந்தார்கள்.

காந்திஜியின் தமிழகச் சுற்றுப் பயணத்தின்போது அம்பாதுரை ரயில் நிலையத்தருகே நடந்த ஒரு சம்பவமும் அந்த இடத்தையே தேர்ந்தெடுக்க அவரை ஊக்கியது. காந்திஜியைக் காண அந்த ரயில் நிலையத்தருகே ஏராளமான மக்கள் குழுமியிருந்தார்கள். ஆனால் அண்ணலைச் சுமந்து செல்லும் பெருமித ஆணவத்தாலோ என்னவோ அந்த ரயில் அங்கு நிற்காமலேயே செல்லவிருந்தது. இதை அறிந்த கிராம மக்கள் ரயில் ஊழியர் ஒருவருடன் சேர்ந்து காந்திய வழியிலேயே ஒரு சதி செய்தனர். அம்பாதுரை ரயில் நிலையத்



''தயவு செய்து அந்தச் சுத்தியை ஒரு நிமிஷம் தரீங்களா?''
''எதற்கு சுத்தி?''
''என் அந்தரங்க சுத்தியை ஒரு தட்டு தட்டிட்டுத் தர்றேன்!''

தருகே கைகாட்டி இறங்கவில்லை. காரணத்தைத் அறிய காந்திஜி கதவைத் திறந்து எட்டிப் பார்த்தார். ''மகாத்மா காந்திக்கு ஜே!'' என்ற கோஷம் விண்ணை முட்டியது. மக்கள் கண் குளிரத் தேசப் பிதாவைத் தரிசித்து மகிழ்ந்தனர்.

இப்படி ஒரு தந்திரம் செய்து அண்ணலைத் தரிசிக்கத் தீர்மானித்த மக்கள் வாழும் இந்தப் பகுதியில்தான் காந்தி கிராமம் அமைய வேண்டும் என்று முடிவுகட்டினார் சௌந்தரம். காற்று, மழையைத் தடுக்க ஒரு கதவுகூட இல்லாத, இருட்டை விரட்ட லாந்தர் ஒன்று தவிர, வேறு விளக்குக்கூட இல்லாத ஒரு கட்டிடத்தில் ஆரம்பமாயிற்று காந்தி கிராமம். ஆனால் அன்று ஏற்றப்பட்டது சத்தியச் சுடரானபடியால் நாளுக்கு நாள் அதன் பிரகாசம் அதிகரித்து வருகிறது. இன்று நானூறு ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்த ஒரு 'பல்கலைக் கழகத்'துக்கே ஒளியூட்டி வருகிறது. அண்ணலும் இதைத்தான் அன்றே உணர்ந்து சொன்னார். 'என் ஆசி எதற்கு? இறைவனை வழிபடுங்கள்' என்றவர் பின்னர் 'எங்கே சத்தியம் ஆட்சி புரிகிறதோ அங்கு வெற்றி நிச்சயம் நிலைக்கும்' என்று வாழ்த்துச் செய்தி மட்டும் அனுப்பினார். தீர்க்கதரிசியின் சொல் நூற்றுக்கு நூறு உண்மையாகி யிருக்கிறது.

டாக்டர் ராதாகிருஷ்ணன் உப ராஷ்டிரபதியாக இருந்தபோது சர்வகலாசாலை ஆய்வுக் குழுவின் தலைவராக இருந்து பணியாற்றினார். இந்த ஆய்வுக்குழு கிராமப்புறங்களில் கல்லூரிகளும் பல்கலைக் கழகங்களும் ஏற்பட வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தியது. இக்கல்லூரிகள் கிராமச் சூழ்நிலைகளுக்கும், தேவைகளுக்கும் ஏற்ப உயர் கல்வி வழங்க வேண்டும் என்று சிபாரிசு செய்தது. இந்தப் பெரிய பொறுப்பை ஏற்க முன்வந்த காந்தி கிராமம் படிப்படியாக விரிவடைந்தது. மத்திய மாநில அரசுகளின் பொருளுதவி தவிர நாளடைவில் ஐ. நா. சபையின் உதவியும், அமெரிக்க அரசு, தர்ம ஸ்தாபனங்களின் உதவியும் கிடைத்தன. (WHO: U. S. AID: FORD FOUNDATION) காந்தி கிராமத்தின் பணிகள் சிறந்தன.

இன்று காந்தி கிராமத்துக்குத் திருநெல்வேலி மாவட்டம் சிவசைலத்தில் சில கிளைகளும் உண்டு. காந்தி கிராமத்தின் வெற்றி, கோவை மாவட்டத்தில் கஸ்தூரிபா கிராமம் தோன்றவும் துணை நின்றிருக்கிறது.

அண்ணல் காட்டிய வழியில் திரு ஜி. ராமச்சந்திரன், திருமதி சௌந்தரம் ராமச்சந்திரன் ஆகியோரது தலைமையில் லட்சியப் பணியாற்றுகிறவர்களைக் காந்தி கிராமம் ஏராளமாகப் பெற்றுப் பெருமையுற்றிருக்கிறது. அறுபது பொதுக்குழு உறுப்பினர்கள் ஜனநாயக முறையில் இயக்குனரைத் தேர்ந்தெடுக்கின்றனர். இன்றைய இயக்குனர் திரு ஜி. ராமச்சந்திரன். காரியக் கமிட்டி ஒன்றை இயக்குனர் நியமிக்கிறார். இக் கமிட்டியில் காந்தி கிராமத்தின் வளர்ச்சியில் அக்கறை கொண்ட வெளி மனிதர்களும் உள்ளனர். இந்த ஜனநாயக அமைப்பு எந்த அளவுக்குச் சுதந்திரமாக இயங்குகிறது என்பதற்கு ஓர் உதாரணம்: சௌந்தரம் ராமச்சந்திரன் மத்திய அமைச்சராக வேண்டும் என்று விரும்பிக் கேட்டபோது பொதுக் குழு உறுப்பினர்கள் பலர் அதை வன்மையாக எதிர்த்தனர்! ''நான் ஒரு மந்திரியானால் காந்தி கிராமத்துக்கு நல்லதுதானே?'' என்று சௌந்தரம் வாதாடினார். ''இல்லவே இல்லை. நீங்கள் அமைச்சரானால் காந்தி கிராமத்துக்கு உங்களால் ஒரு உபகாரமும் செய்ய முடியாது போகும்'' என்றார் பொருளாளர் கிருஷ்ணமூர்த்தி. அவர் கூறியபடியேதான் நடந்தது! அமைச்சரான சௌந்தரம் நாட்டைப் பற்றி நினைக்க வேண்டியவரானார். காந்தி கிராமம் பற்றி எண்ணுவது ஒரு வகையில் சுயநல சிந்தனையாயிற்று!

எத்தனையோ நிறுவனங்களையும் திட்டங்களையும் தன்னிடத்தே கொண்டிருப்பினும் காந்தி கிராமத்தின் ஜீவன் என்பது 'சௌபாக்கியம்' என்ற குழந்தைகள் இல்லத்தில்தான் உள்ளது. அநாதை ஆசிரமம் என்ற சொற்றொடரையே வெறுப்பவர் சௌந்தரம். 'நானும் மற்றவர்களும் குழந்தைகளைக் கவனித்துக்கொள்ள இருக்கும்போது அநாதைகள் என்று இவர்களைக் கருதுவானேன்?' என்பார்.. உண்மைதான். முட்புதர்களில், வைகை ஆற்றங்கரையில் என்று பல இடங்களில் கண்டெடுக்கப்பட்ட குழந்தைகளோடு, ஏதோ நோய்க்கு என்று கிராமப் பூசாரி சூடு போடப் போக, இறந்து போனதாகக் கருதிக் கைவிடப்பட்ட ஒரு குழந்தைகூடக் கடைசியில் புகலிடம் தேடி இங்கு வந்திருக்கிறது. நான் காந்தி கிராமம் சென்றிருந்தபோது சிறுமி கங்கா இனிய குரலில் கணீரென்று பாடக் குழந்தைகள் குதூகலமாக ஆடி மகிழ்ந்ததையும், விளக்கேற்றி வைத்து எல்லாக் குழந்தைகளும் ஆசிரியைகளும் சேர்ந்து பல கடவுளரையும் வணங்கி வழிபட்ட அழகையும் பார்த்தேன், அவர்கள் மனங்களைப் படித்து மகிழ்ந்தேன்.

திரைப்படக் கதை ஒன்றில் வரும் அநாதை ஆசிரமத்தையும் அதன் தலைவியையும் படம் பிடிக்க வேண்டி யிருந்தது. தயாரிப்பாளர்கள் ''சௌபாக்கிய''த்தைத் தேர்ந்தெடுத்தனர்.



''என்னங்க நீங்க நெஞ்சிலே பச்சை குத்திட்டிருக்கிற மரம் ஏன் இப்படி வளைந்திருக்கு?''
''என் நெஞ்சிலே இப்போ புயல் வீசுதடி அதனால்தான்!''

சினிமா நட்சத்திரம் ஆசிரமத் தலைவியாக நடிப்பதைப் படம் பிடித்தார்கள். அப்போது ''ஏனம்மா? இப்படிப் பகட்டான புடவையா அணிந்து நடிப்பது? எங்கள் அம்மா கதர் அல்லவா உடுத்துவாங்க?'' என்று பளிச்சென்று கேட்டாள் ஒரு சிறுமி.

இத்தகைய புத்திசாலிக் குழந்தைகள் வளர்ந்து பெரியவர்களாகித் தக்க கணவன்மார்களை அடையும்போது காந்தி கிராமத்தைச் சேர்ந்தவர்களுக்கு ஏற்படும் பெருமிதம் சொல்லி முடியாது! சிலருக்கு அமெரிக்காவிலிருந்துகூட அல்லவா மாப்பிள்ளைகள் வருகிறார்கள்!

வாழ்க்கையில் திசை தப்பிப் போனவர்கள், கணவனால் கைவிடப்பட்டவர்கள் என்று துயரில் ஆழ்ந்த பெண்களுக்கென்று ஓர் ஆசிரமம் உள்ளது. இவர்கள் தொழில் கற்றுத் தங்களைத் தாங்களே காத்துக் கொள்ளும் திறன் பெற்றதும், சில கணவன்மார்கள், 'வாழ்க்கைச் செலவு பெருகிவிட்ட இந்த நாளில் சம்பாதிக்கும் மனைவி தேவைதான்' என்று கூறித் திரும்ப அழைத்துக் கொள்கிறார்களாம்!

விவசாயக் கல்லூரியில் மண் வளம் முதல் கால்நடை மருத்துவம் வரையில் சொல்லித் தரப்படும் பல பாடத் திட்டங்களின் பட்டியலைப் படித்தாலே தலை சுற்றும். விவசாயத்துக்குச் சம்பந்தப்பட்ட கிராமப் பொருளாதாரம், பண்ணை நிர்வாகம், சீதோஷ்ண நிலையை ஆராய்தல், வயல் பரப்பினை அளக்க சர்வே நடத்துதல் போன்ற பலப் பல விஷயங்கள் கற்றுத் தரப்படுகின்றன.

காந்தி கிராமத்தின் காதி பவனத்தால் சுற்றுப்புறத்தில் ஏராளமான கிராமங்கள் பயன் பெறுகின்றன. காதி பவனம் இல்லாதுபோனால் இக்கிராமங்களின் பொருளாதாரமே சீர்குலைந்துவிடும் என்ற அளவுக்கு இது இன்றியமையாததாகி விட்டது.

மனிதர்கள் உணவு தயாரிக்கப் பயன்படுத்தும் எண்ணெயை உபயோகித்துச் சோப்பு உற்பத்தி செய்வதை அநீதி என்று கருதும் காந்தி கிராமம், உணவாக முடியாத இதர எண்ணெய்களைப் பயன்படுத்தித் தரமான சோப்பு உற்பத்தி செய்கிறது. இயந்திர உதவியின்றிக் காகிதமும் தயாரிக்கிறது.

சென்னை பாப்பாஞ்சாவடியில் ஆரம்பமான அவ்வை கிராம மருத்துவ சேவை நிலையம் பின்னால் காந்தி கிராமத்துக்கு இடம் பெயர்ந்து நூற்று இருபது படுக்கை வசதி கொண்ட கஸ்தூரிபா ஆஸ்பத்திரியை இணைத்துக் கொண்டு விரிவடைந்துள்ளது. வயிற்றைக் கிழிக்காமலேயே பெண்களுக்குக் கருத்தடை ஆபரேஷன் செய்வதில் புரட்சிகரமான புதிய முறையைக் கையாண்டு மகத்தான வெற்றியும் பெற்றிருக்கிறது.

இன்னும் குழந்தைகளுக்கான பள்ளிக்கூடங்கள் முதல் மேல் பட்டப் படிப்புக்கான கல்லூரிகள் வரை எத்தனையோ பல நிறுவனங்கள், அமைப்புக்கள் உள்ளன காந்தி கிராமத்திலே.

''இவ்வளவிருந்தும் நாம் உண்மையிலேயே காந்தியக் கோட்பாடுகளைப் பூரணமாகப் பின்பற்றுகிறோமா? என்ற சந்தேகம் அடிக்கடி வந்துவிடுகிறது'' என்றார் பொருளாளர் கிருஷ்ணமூர்த்தி. தொடர்ந்து, ''மதுவிலக்கு ரத்து பற்றி நம்மால் என்ன செய்ய முடிந்தது? குடும்பக் கட்டுப்பாடு திட்டத்துக்கு நாம் தரும் ஆதரவு சரியா? (இரண்டையும் இணைத்து, 'அளவோடு குடித்து வளமோடு வாழுங்கள்!' என்று ஒரு கள்ளுக்கடை பிரசாரம் செய்வதையும் காந்தி கிராமம் அருகே சாலையோரத்தில் நான் பார்க்க நேர்ந்தது!) மேலும் மேலும் காந்தி கிராமத்தின் தேவைகளை வளர்த்துக் கொண்டே போகிறோமே, இதற்கு காந்திஜி ஒப்புதல் அளிப்பாரா? சூழ்நிலையின் நிர்ப்பந்தங்களுக்கு ஏற்ப இயந்திரங்களைப் பயன்படுத்துகிறோமே; எங்களில் சிலர் சம்பளம் போதவில்லை என்று கேட்கிறார்களே; வேறு சிலர் சம்பளம் தரச் சற்றுக் காலதாமதமானபோது நிர்வாகிகளைக் 'கெரோ' செய்யவும் தயாரானார்களே? — இதையெல்லாம் பற்றி அண்ணல் இன்று இருந்தால் என்ன நினைப்பார்?'' என்றெல்லாம் எண்ணிப் பார்க்கிறேன் என்றார் அவர்.

திருப்தி இல்லாதவரை வளர்ச்சிக்கு இடமுண்டு. திருப்தி அடைந்து விட்டால்தான் ஆபத்து. அது ஆக்கத் திறனின் எதிரி. அண்ணலைச் சதா எண்ணியபடி குறை நிறைகளைப் பரிசுத்த உள்ளத்துடன் அடிக்கடி எடை போட்டுப் பார்க்கிறவர்கள் முழு மதியாக விளங்க முடியாது போனாலும் பதினாலாம் நாள் சந்திரனாகவாவது திகழ்வது சாத்தியமே. காந்தி கிராமம் இந்த நிலையில்தான் இருக்கிறது.

மற்ற எல்லா நற்பணிகளுக்கும் உள்ளது போன்று காந்தி கிராமத்துக்கும் உள்ள முக்கிய, பெரிய பிரச்னை பணப் பிரச்னைதான்! பிரதமர் இந்திரா காந்தி தலைமையில் ஜனவரி முதல் வாரம் வெள்ளி விழாக் கொண்டாடுவதையொட்டி அதன் பல்வேறு சிறப்புப் பணிகளும் தொடர்ந்து, தடையின்றி நடக்க ஒரு நிரந்தர நிதி ஏற்படுத்த வேண்டும் என்பதில் முனைந்திருக்கிறார் ஸ்ரீமதி சௌந்தரம் ராமச்சந்திரன். தமது வாழ்நாளில் ஐம்பது சதவீதத்துக்கும் அதிகமாகக் கிராமங்களில் தொண்டாற்றுவதிலேயே கழித்துவிட்டவரும் காந்தி கிராமத்திலும் சுற்று வட்டாரத்திலும் அனைவருக்கும் 'அம்மா'வாகத் திகழ்பவருமான சௌந்தரம், இம்முயற்சியில் வெற்றி பெறுவார் என்பதில் ஐயமில்லை.

இன்றைய முன்னணி பிரபல

# பழனி டாக்டர் எஸ். காளிமுத்து

**R. M. P. (Ind.) V. V. C., A. M. I. H.**

**அவர்களின் விஜயம்**



**சந்திக்கும் விலாசங்கள்**

**1-ந் தேதி திருநெல்வேலி:** நெல்லை வாட்ஜ் காலை 8 மணி முதல் 12 மணி வரை.

**1-ந் தேதி நாகர்கோவில்:** உடுப்பி ஸ்ரீகிருஷ்ண பவன், மாலை 2 மணி முதல் 4 மணி வரை.

**2-ந் தேதி மதுரை:** மணீஸ் கபே, காலை 8 மணி முதல் மாலை 2 மணி வரை.

**2-ந் தேதி புதுக்கோட்டை:** வஸந்தா லாட்ஜ் மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை.

**3-ந் தேதி காரைக்குடி:** AVM. PL. ரெஸ்ட் ஹவுஸ், காலை 8 மணிமுதல் 11 மணிவரை.

**3-ந் தேதி அறந்தாங்கி:** கோகுலம் லாட்ஜ் பகல் 12 மணி முதல் 1 மணி வரை.

**3-ந் தேதி பட்டுக்கோட்டை:** அசோகாலாட்ஜ் பகல் 2 மணி முதல் 3-30 மணி வரை.

**3-ந் தேதி மன்னார்குடி:** மன்னை லாட்ஜ் மாலை 4-30 மணி முதல் 6 மணி வரை.

**4-ந் தேதி திருச்சி:** ஹோட்டல் அஜந்தா காலை 8 மணி முதல் 2 மணி வரை.

**4-ந் தேதி கரூர்:** பெரியார் உணவு விடுதி மாலை 3-30 முதல் மாலை 5 மணி வரை.

**5-ந் தேதி தஞ்சை:** ராஜா ரெஸ்ட் ஹவுஸ் காலை 8 மணி முதல் பகல் 12 மணி வரை.

**5-ந் தேதி திருவாரூர்:** அபூபக்கர் பில்டிங் மாலை 2 மணி முதல் 4 மணி வரை.

**5-ந் தேதி நாகை:** தினகர விலாஸ், மாலை 5 மணி முதல் 7 மணி வரை.

**6-ந் தேதி காரைக்கால்:** அசோக் லாட்ஜ் காலை 8 மணி முதல் 10 மணி வரை.

**6-ந் தேதி கும்பகோணம்:** தாஜ்மஹால் லாட்ஜ், காலை 11 முதல் 2 மணி வரை.

**6-ந் தேதி மாயவரம்:** காளியாகுடி லாட்ஜ் பகல் 3 மணி முதல் 4-30 மணி வரை.

**6-ந் தேதி கடலூர் N. T.:** ஹோட்டல் பிருந்தாவனம், இரவு 7 மணி முதல் 8-30 மணி வரை.

**7-ந் தேதி பாண்டிச்சேரி:** அருணா லாட்ஜ் காலை 8 மணி முதல் 10 மணி வரை.

## பழனி சித்தர் வைத்தியசாலை

போன்: 316] **பழனி** [தந்தி: சித்தர்



மத்திய தொழிற்துறை அபிவிருத்தி இலாகாவில் தனிச் சிறப்பு அதிகாரியாக(Retd. Development Officer and Officer on Special Duty D. G. T. D. Ministry of Industrial Development) பணியாற்றி சமீபத்தில் ஓய்வுபெற்ற **ஸ்ரீ வெ. கிருஷ்ணமூர்த்தி** அவர்களின் **சஷ்டியப்த பூர்த்தி** அக்டோபர் 31-ந் தேதி அன்று புது டில்லியில் வெகு சிறப்பாக நடந்தேறியது. உறவினர்களும், நண்பர்களும், பிரமுகர்களும் நேரில் கலந்து கொண்டும் வாழ்த்துக்கள் அனுப்பி வைத்தும் விழாவைச் சிறப்பித்தனர்.

வாழ்க மணிவிழா மணமக்கள்!

நெஞ்சப் பொய்கையில் வளர்கின்றாய்!
நீங்கா நினைவில் மலர்கின்றாய்!



ராஜாமணி அம்மையார்

தோற்றம் : 30 - 1 - 1930 ● மறைவு : 23 - 12 - 1971

உனது நினைவை மறவாத

கணவர் : **கே. நடராசன்**
குமாரர் : **என். சிவபாதம்**
மகள் : **திருமதி மாதவிகுமார்**

**அறுந்த செருப்பை அற்புதமானதொரு பாத்திரமாகப் படைத்து அழுத்தமானதொரு கருத்துக்கு வித்திடும் திரு கிரேஜ்யா டெலெட்டா இத்தாலிய மொழியில் இணையில்லாப் புகழ் சேர்த்த ஆசிரியர். செல்வம் 'செல்வோம்' என்று அச்சுறுத்தும் இயல்புடையது. அதைப் பெற்று வாழ்வை வளப்படுத்திக் கொள்ள விரும்புகிறார்கள் ஏழ்மையில் உழலும் இளம் தம்பதிகள். நேர்மை வழி நின்று நாணயமாகப் பெற்றால் அன்றி அது தரித்திராது என்னும் எந்நாட்டவருக்கும் பொதுவான உண்மையை அறுந்த செருப்பை உலாவ விட்டே அறைந்து கூறுகிறார்.**

## இத்தாலியக் கதை

# அறுந்த செருப்பு

### கிரேஜ்யா டெலெட்டா

எலியா கேரைக்கு நீதிமன்றத்தில் அலுவல்களே கிடையாது. மிகவும் கஷ்ட ஜீவனம். கோர்ட்டு — கச்சேரியின் பெயரைக் கேட்டால் மக்கள் முகம் சிணுங்கினர். எவ்வளவு முடியுமோ, அவ்வளவு கோர்ட் விவகாரங்களிலிருந்து விலகியே இருக்க விரும்பினர். பெரிய பெரிய வழக்கறிஞர்களும் பாரிஸ்டர்களும் கூடச் சாதாரண வக்கீல்களைப் போலச் சின்னச் சின்ன வழக்குக்காகத் தொங்கினர். எலியாவைத்தேடி மருந்துக்குக்கூட வழக்கு வருவதில்லை. இருந்தாலும் அவன் 'எங்கள் வீட்டுக்காரரும் கச்சேரிக்குப் போகிறார்' என்று கச்சேரிக்குப் போய் வந்தான். அங்கே 'லாபி'யில் உட்கார்ந்து புது மணம் புரிந்து கொண்டிருந்த தன் மனைவியின் பேரில் கவிதைகள் எழுதி வந்தான். அவன் எழுதிய ஒரு கவிதையின் சாராம்சம் இதோ :

'இவ்வுலகத்தை என்னவென்பது? நடப்பது நடந்தே தீரும் என்பதில் ஐயம் இல்லை. என்ன நடக்கும் என்பது எனக்குத் தெரியும். ஏனென்றால் நான் ஒரு கவிஞன்; தத்துவ ஞானி. மனிதனது வாழ்க்கையில் ஏற்றத் தாழ்வு ஏற்படுவது சகஜம். இன்று எழுச்சி என்றால் நாளை வீழ்ச்சி ஏற்படுவது கண்கூடு. அதற்கு மறுநாளே நம்பிக்கைக் கதிர் இதயத்தில் ஒளி பாய்ச்சி வாழ்க்கையில் ஒரு பிடிப்பை உண்டு பண்ணுவதும் அநுபவ சித்தாந்தம். எனவே, என் இதயத்தரசியே! கவலையை ஒழி! நம்பிக்கை இழக்காதே. சித்தப்பா ஆகஸ்ட் இறக்கும்பொழுது தமது சொத்தை நமக்கு எழுதி வைத்துவிட்டால் அப்புறம் நமக்கு விடிவு காலம் பிறந்துவிடும். நமது வாழ்க்கைப் படகு வெள்ளத்தின் மத்தியில் சிக்கித் தவிக்காமல் நம்மைக் கரையேற்றும். இத்தனை சிரமங்களிலும் நான் முகம் மலர மகிழ்ச்சியோடு வளைய வருவதற்குக் காரணம் எனக்குத் துணையாக நீ என் அருகில் இருப்பது தான்!''

குளிர் காலம். ஆனாலும் அன்று காலை தன் வழக்கப்படி உலாவச் சென்றிருந்தான் எலியா. ஊர் வண்டிக்காரன் ஒருவன் எலியாவின் தோள்களைத் தட்டி, ''தம்பி எலியா! நான் இப்பொழுதுதான் வண்டி எடுத்துக்கொண்டு டெர்லனோவாவுக்குப் போய் வருகிறேன். உன் சித்தப்பா ஆகஸ்ட்டைப் பார்த்தேன். அவர் கடும் நோய்வாய்ப்பட்டிருக்கிறார். இன்றோ, நாளையோ, எப்பொழுதோ தெரியாது!'' என்றான்.



எலியாவின் மனைவி வீட்டு வாசலில் குளிருக்கு இதமாக வெய்யில் காய்ந்த வண்ணம் நின்றுகொண்டிருந்தாள். எலியா தன் மனைவிக்கு இத்துயரச் செய்தியைச் சொல்ல ஓடோடி வந்தான். கவலைக்கிடமான இச்செய்தியைக் கேட்டு எலியாவின் மனைவி கலங்கவில்லை. அதோடு நின்ற இடத்திலிருந்து நகரவும் இல்லை. இப்படியும் இருப்பாளோ ஒருத்தி? எலியா தலையைத் தூக்கி மனைவியைப் பார்த்தான். இருவருடைய முகங்களும் இனிய புன்னகையால் இதழ் விரித்தன.

''நான் போய் வரட்டுமா?'' எலியா மெதுவான குரலில் கேட்டான்.

''எங்கே?''



“தெரியாதா? சித்தப்பா ஆகஸ்ட்டின் ஊருக்குத்தான். எனக்கு வேறு போக்கிடம் ஏது? இன்றையப் பொழுது நல்ல பொழுதாக விடிந்திருக்கிறது. இனி நமக்கு அதிர்ஷ்டம் கைகூடும் என்று நினைக்கிறேன்!'' என்றான் எலியா. பிறகு, தான் நோட்டுப் புத்தகத்தில் எழுதி வைத்திருந்த கவிதைப் பக்கத்தைக் கிழித்து மனைவியின் கையில் கொடுத்தான். தான் இல்லாத நேரங்களில் பொழுதை நல்ல விதமாகப் போக்க மனைவிக்கு எலியா செய்யக் கூடியது இவ்வளவேதான்!

கொஞ்ச நாட்களாகவே எலியா தன் மன அமைதிக்கு இரண்டே இரண்டு விஷயங்களைத் தான் நம்பியிருந்தான். ஒன்று அவன் அறிவு வளர்த்துவிட்ட தத்துவ போதனை. மற்றொன்று சித்தப்பா ஆகஸ்ட்டின் சொத்து சம்பந்தமான உயில். தத்துவ சிந்தனையையோ உயிலையோ விட்டால் அவனுக்கு வேறு உதவி எத்திசை நோக்கினும் இருப்பதாகத் தோன்றவில்லை. சித்தப்பாவின் உயில் அவனுக்குத் தெம்பை அளிக்கவே, நடையை எட்டிப் போட்டான். நடக்கும்பொழுது அவனுக்குத் தன் செருப்பின் நினைவு வந்தது. 'இந்த அறுந்த செருப்பு என்னைச் சித்தப்பாவின் வீடு வரைக்கும் கொண்டு விட்டால் போதும். அப்புறம் கவலை இல்லை.'

அந்த அறுந்த செருப்பைத் தேய்த்துத் தேய்த்து நடந்தவாறே அவன் ஒரு கிராமத்தை அடைந்தான். அவ்வூர்ச் சத்திரம் ஒன்றுக்குச் சென்று அன்றிரவு தங்கச் சிறிது இடம் கேட்டான். உரிய வாடகையை முன் பணமாகப் பெற்றுக் கொண்டு இடம் கொடுத்தார்கள். அவனுக்குக் கொடுக்கப்பட்ட அறை குப்பையும் கூளமும் நிறைந்த மிகச் சிறிய அறை. அதில் ஏற்கனவே இரண்டு



"இந்தக் குழந்தைங்களுக்குச் சோழர் - பாண்டியா - பல்லவான்னு பெயரை வெச்சுட்டு எல்லாரையும் பள்ளிக்கூடத்துக்குத் தள்ளிக்கிட்டுப் போகும்படியா இருக்கே!"

பயணிகள் தூங்கிக் கொண்டிருந்தனர். ஒருவனே நன்கு குறட்டை விட்டே தூங்கிக் கொண்டிருந்தான்.

எலியா, தான் உடுத்தியிருந்த எளிய உடையுடனேயே படுத்தான். அவனிடம் மாற்றுடை ஏது? கட்டிலில் கட்டையைக் கடத்தி வெகு நேரமாகியும் அவனுக்கு உறக்கம் கொள்ளவில்லை. கண்களை மூடினாலும் கண்களைத் திறந்தாலும் அவன் கண்களுக்கு எதிரே கணக்கில்லாத செருப்புக்கள் வரிசை வரிசையாகத் தோன்றின.

திடீரென்று அவன் மூளையில் ஒரு புதிய எண்ணம் பளிச்சிட்டது. அவன் எழுந்து குளிரில் நடுங்கிய வண்ணம் மெதுவாகப் பக்கத்தில் படுத்திருந்த பயணியின் கட்டிலை நெருங்கினான். அதற்கு அடியில் கிடந்த செருப்பை எடுப்பதற்காகக் குனிந்தான்.

எலியா செருப்பைத் தன் காலில் மாட்டிக் கொண்டான். ஆனால் செருப்பின் ஆணிகள் அவன் விறுவிறுத்த விரல்களில் ஊசி போல் குத்தின. சட்டென்று செருப்பைக் கழற்றி இருந்த இடத்திலேயே வைத்து விட்டான்.

அப்பொழுது அறைக்கு வெளியே முற்றத்தில் ஏதோ ஒரு தெளிவற்ற ஒலி கேட்டது.

முற்றத்திலிருந்து வந்த ஓசை அடங்கியதும், அவன் பூனை போல் எழுந்து அறைக்கு வெளியே வந்தான். அங்கு யாரும் இல்லை. அதோடு அறை வாசலிலும் ஒரு ஜோடி செருப்பு கிடப்பதைக் கண்டான்.

எலியா சிறிதும் யோசிக்காமல் அந்தச் செருப்பை எடுத்துத் தன் கோட்டுப் பைகளில் மறைத்துக் கொண்டான். அப்புறம் சத்திரத்தின் வாசலுக்கு வந்தான். அங்கே காவலாளி அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். எலியா ஓசைப்படாமல் வாசல் கேட்டைத் திறந்து கொண்டு வெளியேறி விட்டான்.

அரை மணி நேரம் நடந்த பிறகு அவன் அந்தச் செருப்பை அணிந்து கொள்ளத் தீர்மானித்தான். ஒரு சிறு கருங்கல்லில் அமர்ந்து செருப்பைக் கோட்டுப் பையிலிருந்து எடுத்தான். கொஞ்ச நேரம் அதையே இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

செருப்பைப் போட்டுக் கொண்டு எழுந்து நின்றதும் அவன் உள்ளுணர்வு பட்டென்று தாக்கியது. "வீழ்ச்சி! பயங்கர வீழ்ச்சி!"

ஆனால் அவன் இதயத்தின் எச்சரிக்கையைச் சிறிதும் பொருட்படுத்தாமல் புறப்பட்டான். தன் கை இடுக்கில் பழைய அறுந்த செருப்பைப் பத்திரமாக அழுத்திக் கொண்டான். காரணம், அந்தச் செருப்புக்காக அவனை யாராவது பின்தொடர்ந்தால் சட்டென்று பழைய செருப்பை மாட்டிக் கொண்டு புதிய செருப்பை விட்டெறிந்து தப்பித்துக் கொள்ளலாம் அல்லவா?

ஆழ்கடலின் பரப்பில் கூட்டம் போட்டிருந்த பனிப்படலத்தைக் கிழித்துக்கொண்டு உஷைக் கன்னி உதயமானாள். பலபலவென்று பொழுது விடிவதைக் கண்ட எலியா ஏதோ பேய் பிசாசைப் பார்த்து விட்டது போலத் திகிலுற்று நடுங்கிப் போனான். அவன் மூளையை என்ன என்னவோ எண்ண அலைகள் சிதற அடித்துச் சிரமப்படுத்தி விட்டன. கிரீஸைப் போகும் பாதையில் போகிற மக்கள் என்னைப் பார்த்து விட்டால்....? திருட்டுப் போன செய்தியை அறிந்து, 'நாங்கள் வழியில் ஒருவனைப் பார்த்தோம். அவன் பதுங்கிப் பதுங்கி நடந்து கொண்டிருந்தான். அவன் கக்கத்தில் ஏதோ பொட்டணம் போல ஒன்று இருந்தது' என்று சொல்லிவிட்டால்...?'

பகல் வெளிச்சத்தில் கையும் மெய்யுமாகப் பிடிபட்டுவிடக் கூடாதே என்று பயந்து புதிய செருப்புக்களைக் கழற்றித் தன் தலையைச் சுற்றி விட்டெறிந்து விட்டுத் தன் பழைய செருப்புக்களையே மாட்டிக் கொண்டு நடக்கலானான். அப்படியும் அவனுக்கு, இரண்டு ஏழைப் பயணிகளுடன் அவன் ஓர் அறையில் தூங்கினானே, அவர்களில் ஒருவன் தன்னைத் துரத்திக் கொண்டு தன் பின்னாலேயே வருவதாகத் தோன்றியது. பிரமை அம்மட்டோடு நிற்கவில்லை. எலியா விட்டெறிந்த செருப்புக்களை அவன் பொறுக்கி எடுத்துக் கொள்ளுகிறான். அவனுக்குப் பின்னால் அவனோடு வந்தவர்கள் ஓடி வந்து எலியாவைப் பிடித்துக் கொள்ளுகிறார்கள். திருட்டுக் குற்றம் சாட்டி எலியாவை ஒப்புக்கொள்ள வைத்த பின்னரே ஓய்கின்றனர்.

அடே! இந்த விவரமெல்லாம் என் மனைவிக்குத் தெரிந்து விட்டால் என்ன சொல்வாள்! — இந்தக் கற்பனையே எலியாவை உதறி உலுக்கி விட்டது. அதோடு, உண்ணுறை பொருளாகப் புலனுக்கு அகப்படாமல் இருக்கும் ஆத்மா பலமுறை அவனது இந்த இழி செயலைக் கண்டித்துப்புரட்டி எடுத்துவிட்டது.

(ஸ்தாபிதம் : 1947)

# பாலுஸேரி பேனிபிட் சிட் பண்டு பிரைவேட் லிமிடெட்

22/35, ஒப்பணக்கார வீதி கோயம்புத்தூர்

தந்தி : 'EVERMANS' தபால்பெட்டி : 327

## குறுகிய கால மாதச் சீட்டுகள்

| வகுப்பு | மாதச் சந்தா | அங்கத்தினர்கள் | மாதங்கள் | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|
| A | ரூ. 200/- | 25 | 25 | ரூ. 5,000/- |
| B | ரூ. 100/- | 25 | 25 | ரூ. 2,500/- |
| C | ரூ. 50/- | 25 | 25 | ரூ. 1,250/- |
| D | ரூ. 25/- | 25 | 25 | ரூ. 625/- |
| E | ரூ. 20/- | 25 | 25 | ரூ. 500/- |
| F | ரூ. 15/- | 25 | 25 | ரூ. 375/- |
| G | ரூ. 1,000/- | 25 | 25 | ரூ. 25,000/- |
| H | ரூ. 500/- | 20 | 20 | ரூ. 10,000/- |
| I | ரூ. 250/- | 20 | 20 | ரூ. 5,000/- |

## நீண்ட கால மாதச் சீட்டுகள்

| | | | | |
|---|---|---|---|---|
| LTA | ரூ. 500/- | 40 | 40 | ரூ. 20,000/- |
| LTB | ரூ. 250/- | 40 | 40 | ரூ. 10,000/- |
| LTC | ரூ. 125/- | 40 | 40 | ரூ. 5,000/- |

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம் :

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 5

தபால் பெட்டி நெ. 414

கிளைகள் : பம்பாய் - கல்கத்தா - டில்லி - பெங்களூர்




எங்கள் சேவை உங்களுக்குத்தேவை

இன்னுமொரு குழந்தையைப் பெறுவதற்குமுன் சற்று

# யோசியுங்கள்

முதலில் இந்தக்
குழந்தையை நன்றாக
வளர்க்க வேண்டாமா?

இக்குழந்தையை நன்றாக படிக்க வைக்க வேண்டாமா? உங்கள் விருப்பப்படி, குழந்தைக்கு வசதிகள் அனைத்தும் அளிக்க வேண்டாமா? இன்னொரு குழந்தையை உடனே பெற்றால், இதெல்லாம் முடியுமா? சிரமம் தான். அடுத்த குழந்தை உடனே வேண்டாம் என்று நீங்கள் கருதுவது இயற்கைதானே.

நீங்கள் மட்டுமல்ல; உலகெங்கிலும் தம்பதிகள் இவ்விதம்தான் கருதுகிறார்கள். வளமுடன் வளர்க்க வசதிகள் பெருகும் வரை, அவர்கள் இன்னொரு குழந்தையைப் பெறுவதில்லை. நீங்களும் 'நிரோத்' உபயோகித்து குழந்தை பெறுவதைத் தள்ளிப்போடலாம். அனைவரும் விரும்பி ஏற்கும் ரப்பர் கருத்தடைச் சாதனம் நிரோத்; இது ஆண்களுக்கானது. தலைமுறை தலைமுறையாக உபயோகத்தில் இருந்துவரும் சிறந்த, எளிய, பாதுகாப்பான கருத்தடைச் சாதனம் நிரோத். நீங்களும் நிரோத் உபயோகியுங்கள்.

நிரோத் எங்கும் கிடைக்கிறது. அரசாங்க ஆதரவு விலை 15 பைசாவுக்கு 3




இன்னொரு குழந்தையை வளர்க்க வசதி பெறும் வரை
உபயோகியுங்கள்

## நிரோத்



லட்சக்கணக்கான பேர் விரும்பி ஏற்கும் எளிய, பாதுகாப்பான
கருத்தடைச் சாதனம் நிரோத்.

davp 71/460

பலசரக்குக் கடைகள், மருந்தகங்கள், வெற்றிலைபாக்குக்கடைகள் இங்கெல்லாம் நிரோத் விற்பனையாகிறது

நாம் இங்கு வராமலே இருந்திருந்தால் எவ்வளவு நன்றாயிருந்திருக்கும்? சொத்து கைக்கு வருவதற்கு முன்பே நமக்கு இப்படி ஒரு வீழ்ச்சியா?— அவன் மனம் அவனைச் சாடியது.

அவன் சிறிது நேரம் வழியிலேயே நின்றான். ஒரு முடிவுக்கு வந்தவனாக வந்த வழியே திரும்பினான். அவன் எறிந்த செருப்புக்கள் எறிந்த இடத்திலேயே கிடந்தன. எலியா சிறிது நேரம் அவற்றையே பார்த்துக் கொண்டிருந்தான்.

அவன் செருப்பைத் திருடியது என்னவோ உண்மை. திருடும்போது அவன் பயந்துபோய் நாலுகால் பிராணியெனத் தரையில் அடங்கி ஒடுங்கிப் படுத்துக் கொண்டானே, அப்பொழுது அவன் இதயம் எப்படி அடித்துக் கொண்டது? உள்ளம் எத்தகைய நரக வேதனையை அநுபவித்தது? வாசலில் கிடந்த செருப்பைத் தன் கோட்டுப் பையில் ஒளித்து மறைத்துக் கொண்ட அந்த நேரம்! வாழ்நாளெல்லாம் வருந்தினாலும், களங்கத்தையும் படிந்துவிட்ட கறையையும் கழுவுமா? பிறர் அறியாவிட்டாலும் தன்வரையில் அவன் குற்றவாளி குற்றவாளிதானே?

அவன் விட்டெறிந்த செருப்பைப் பொறுக்கி எடுத்துக் கொண்டு, தான் தங்கியிருந்த சத்திரத்தை நோக்கி நடந்தான்.

இருட்டுவதற்குமுன் சத்திரத்தை அடையக் கூடாது என்பதற்காக அவன் மெள்ளவே நடந்தான். ஏறக் குறைய இருபத்தி நான்கு மணி நேரம் அவன் பச்சைத் தண்ணீர் கூடப் பல்லில் ஊற்றவில்லை. அதனால் அவனுக்குக் களைப்பு மேலிட்டது. நடக்கும் பொழுது காற்றில் ஆடும் புல்லைப் போல் பலமுறைகள் அவன் தடுமாறினான்.

சத்திரத்தில் ஒரே மௌனம் நிலவியது. அவன் உணவு அருந்தினான். பிறகு தூங்க இடம் கேட்டான். யார் கண்ணிலும் படாமல் செருப்பை எடுத்த இடத்திலேயே வைத்தான். அப்புறம் தன் கட்டிலுக்கு வந்து படுத்தான். படுத்தவனுக்குத் தன்னை அறியாமல் ஆழ்ந்த தூக்கம் வந்தது.

காலை கண் விழித்ததும் எலியா தன்னிடமிருந்த காசுக்கு ஒரு ரொட்டி வாங்கிக் கொண்டு தன் பயணத்தைத் தொடர்ந்தான்.

பருவக் காற்று வெகு சுகமாக இருந்தது. கருமையான மலைச் சிகரங்களுக்கும் நீலக் கடலுக்கும் இடையே இயற்கையின் எழில் நிமிஷத்துக்கு நிமிஷம் கூடியது. தன் பழைய செருப்பை அணிந்து கொண்டு எலியா தூய மனத்துடன் நடந்து கொண்டிருந்தான். அவன் அறுந்த செருப்பைக் கண்ட மக்கள் அவனைப் பிச்சைக்காரன் என்று எண்ணி இரங்கிப் பருகப் பாலும், தின்ன ரொட்டியும் தந்து உதவினார்கள்.

அவன் தன் சித்தப்பாவின் வீட்டை அடைந்தபொழுது... அவர் இறந்து வெகு நேரம் ஆகவில்லை.

அவனைக் கண்டதும் வேலைக்காரி சொன்னாள்: ''எசமானர் உன் வரவை மிக ஆவலோடு எதிர்பார்த்தார். மூன்று நாட்களுக்கு முன் அவர் உனக்குத் தந்திகூடக் கொடுத்தார். நீ ஒருவன்தான் அவர் வாரிசு என்று வாய்க்கு வாய் சொல்லிக் கொண்டிருந்தார். ஆனால் ஒரேயடியாக நீ அவரை மறந்துவிட்டாய். அதனால் அவருக்கு உன்னிடம் மிகவும் கோபம். இன்று காலையிலும் நீ வராமற் போகவே, தமது சொத்து முழுவதையும் மீனவர்களின் அநாதைக் குழந்தைகளுக்கு எழுதி வைத்துவிட்டார்!''

எலியா தன் ஊருக்கு நடையைக் கட்டினான். வீடு சேர்ந்து தன் மனைவியிடம் விவரம் கூறினான். அதைக்கேட்டு அவள் சிறிதும் பரபரப்புக் காட்டாமல் அமைதியாகக் கூறினாள்: ''அந்தச் சொத்து கிடைக்காதது நல்லதாய்ப் போயிற்று. கைக்கு வருவதற்கு முன்பாகவே செல்வம் மனிதனின் நாணயத்தை இப்படிக் கெடுக்கக் கூடுமானால் அது கிடைக்காமல் இருப்பதே மிகவும் நல்லது.''

-ஹிந்தியிலிருந்து தமிழாக்கம் : அஜயம்



மிதமிஞ்சிய, உணர்ச்சிமயமான அன்பு கடைசியில் எப்படி முடிகிறது? ஒரு தப்பபிப்பிராயத்தின் விளைவாக, சோகமயமாக முடிகிறது! ஏதோ ஒரு காரணத்தால் ஒருவரை ஒருவர் நம்பிக்கைத் துரோகி என்று கருதுகிறார்கள்.

கர்வம் காரணமாக ஒருவருக் கொருவர் விளக்கம் கூறிக் கொள்ள முன்வருவதில்லை. சண்டை போட்டுப் பிரிகிறார்கள்.

இதற்குப் பிடிவாதம் ஒன்று மட்டுமே காரணமாகிறது.

பிரஞ்சுக் கதை

# பாலைவனத்துப் புலி

ஸ்ரீமான் மார்ட்டின் நடத்திய வன விலங்குகள் கண்காட்சியிலிருந்து வெளியே வந்து கொண்டே, ''எல்லா நிகழ்ச்சிகளுமே மகா பயங்கரம்'' என்றாள் அவள். அன்றைய நிகழ்ச்சி நிரலின் பாஷையிலேயே சொல்வதானால், 'துணிச்சலான, ஜாஜ்வல்யமான அம்சம்: கழுதைப் புலியைக் கட்டி மேய்த்தல்.' அதை அப்போதுதான் பார்த்துவிட்டு வெளியே வந்திருந்தாள் அவள்.

அவள் தொடர்ந்தாள்: ''எந்த முறைகளைக் கையாண்டு இந்த மிருகங்களை இந்த அளவுக்குச் சாதுக்களாக்கியிருப்பான்? அவற்றின் அன்பைப் பெற்றுள்ளது பற்றிச் சந்தேகமே யில்லையே அவனுக்கு!''

நான் சொன்னேன்: ''உனக்கு எது பிரச்னை என்று தோன்றுகிறதோ, அது உண்மையில் ரொம்ப இயற்கையான விஷயம்தான்!''

''ஓ!'' என்று கூவியவள் உதடுகளில் அவநம்பிக்கையை உணர்த்தும் ஒரு புன்முறுவலை அலைய விட்டாள்.

''மிருகங்களுக்கு ஆழ்ந்த உணர்ச்சிகள்—கட்டுக்கடங்காத கோபம், அளப்பரிய காதல், பொசுக்கும் பொறுமை போன்றவை — இடையாது என்று நீ நினைக்கிறாயா? உண்மை இதற்கு நேர் எதிரிடையானது. நம்முடைய நாகரிக முன்னேற்றத்தின் விளைவாக என்னென்ன கெட்ட சுபாவங்கள் ஏற்பட்டுள்ளனவோ அவற்றை யெல்லாம் மிருகங்களுக்கும் நாம் உணர்த்த முடியும்.''

அவள் என்னை அளவு கடந்த ஆச்சரியத்தோடு பார்த்தாள்.

நான் தொடர்ந்தேன்: ''ஆனால் மார்ட்டினின் வன விலங்குகள் கண்காட்சியை நான் முதன் முதலாகப் பார்த்தபோது உன்னைப் போலவேதான் நானும் வியப்பில் வாய் விட்டுக் கூச்சலிட்டேன். ஒரு வயதான சிப்பாய்க்குப் பக்கத்தில் நான் உட்கார நேர்ந்தது. அவர் வலது காலை இழந்து விட்டவர். நான்



# பால்ஸாக்

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்

கண்காட்சிக்குள் நுழைந்த போதுதான் அவரும் வந்தார். அப்போதே அவர் முகம் என் கவனத்தைக் கவர்ந்திருந்தது. வீரம் விகசிக்கும் தலை. பல யுத்த களங்களைப் பார்த்த முத்திரை பதிந்திருந்தது முகத்தில். நெப்போலியனுடைய யுத்தங்கள் பலவற்றைக் கண்டவர் என்று நெற்றியில் எழுதி ஒட்டியது போலிருந்தது. தவிர என்னை எப்போதுமே ஈர்க்கும் ஒளிவு மறைவற்ற குஷாலான முக பாவம் அவரிடம் இருந்தது. எதைக் குறித்தும் ஆச்சரியப்பட முடியாத அளவுக்கு அனுபவங்களைப் பெற்றுவிட்ட சிப்பாய்களுள் ஒருவர் அவர். இறந்து கொண்டிருக்கும் ஒரு சக சிப்பாயின் உடலில் தோன்றும் அஷ்ட கோணல்கள் இவரைப் போன்றவர்களிடம் சிரிப்பை உண்டாக்கும். அவனிடத்தில் உள்ளவற்றைத் திருடிக் கொண்டு சற்றும் மனப்பாரம் இன்றி அவனைப் புதைத்து விடுவார்கள்! பாய்ந்து வரும் தோட்டாக்களின் வழியில் நிற்பார்கள், அச்சமின்றி. யோசித்து யோசித்துக் காலத்தை வீணாக்க மாட்டார்கள். சைத்தானிடம் கூட நட்புரிமை கொள்ளத் தயங்க மாட்டார்கள். இப்படிப்பட்ட நபர்களுள் ஒருவர் இவர் என்பது புரிந்தது. வன விலங்குக் காட்சியின் சொந்தக்காரன் மிருகங்களுடன் மிக அன்னியோன்யமாகப் பழகுவதைப் பார்த்துவிட்டு என் தோழர் கேலியும் அலட்சியமுமாக உதடுகளைக் குவித்தார். மேன்மையான மக்கள் தங்களை ஏமாற்ற முடியாது என்று காட்ட, விநோதமாகவும் பாவ பூர்வமாகவும் முகத்தைக் கோணுவார்களே அந்த மாதிரி இவர் முகம் காட்சியளித்தது. நான் மார்ட்டினுடைய தைரியத்தைப் பற்றி விரிந்துரைக்கையில் அவர் புன்னகையுடன் எல்லாம் அறிந்த மாதிரி தலையசைத்துக் கூறினார்: 'தெரிந்த விஷயம்தானே!'

'' 'தெரிந்த விஷயமா? எப்படி?' என்று நான் கேட்டேன். 'இந்த மர்மத்தை மட்டும் நீங்கள் விளக்குவீர்களானால் நான் ரொம்பவும் கடமைப்பட்டவனுவேன்' என்றேன்.

''நாங்கள் ஒருவருக்கொருவர் அறிமுகமாகச் சில நிமிஷங்கள் பிடித்தன. அதன் பின் எங்கள் கண்களில் தென்பட்ட முதல் ஹோட்டலுக்குள் நாங்கள் சாப்பிட நுழைந்தோம். இரவு உணவின் கடைசி அம்சமாக இனிப்பு அருந்தும்போது ஒரு பாட்டில் *சாம்பெய்ன் வயதான, விநோதமான இந்தச் சிப்பாயின் பழைய நினைவுகளைப் புதுப்பித்துப் பளபளக்கச் செய்தது. அவர் தம் கதையைச் சொன்னார். அதைக் கேட்டுவிட்டு, 'தெரிந்த விஷயம்தானே என்று நீங்கள் சொன்னதற்கு வலுவான காரணங்கள் உள்ளன' என்று நான் ஒப்புக்கொண்டேன்.''

அவள் வீட்டை நாங்கள் அடைந்ததும் என்னைக் கேள்வி மேல் கேள்வி கேட்டுக் குடைந்தெடுத்தும் பலவாறுகச் சத்தியங்கள் செய்தும் அவள் படுத்திய பாட்டில் நான் அந்தக் கிழச் சிப்பாயின் அந்தரங்கங்களை அவளுக்குத் தெரியப்படுத்த ஒப்புக்கொண்டேன். மறுநாள் அவளுக்குப் பின்வரும் இதிகாச நிகழ்ச்சி கிடைத்தது. இதற்கு ''எகிப்தில் ஒரு பிரெஞ்சுக்காரன்'' என்று தலைப்பிடலாம்.

வடக்கு எகிப்தில் ஜெனரல் டிஸெய்க்ஸ் நடத்திய படையெடுப்பில் ப்ரொவன்ஸ் மாநிலத்தைச் சேர்ந்த ஒரு சிப்பாய் மான்கிராபின்களிடம் சிறைப்பட்டான். அந்த அரா

---

* ஒரு வகை மது.

பியர்கள் அவனை நைல் நதியின் முகத்துவாரத்துக்கு அப்பால் பாலைவனங்களுக்கு அழைத்துச் சென்றார்கள்.

தங்களுக்கும் பிரெஞ்சுப் பட்டாளத்துக்குமிடையில் உள்ள தூரத்தை அதிகப்படுத்த விரும்பிய மான்கிராபின்கள் நிற்காமல் நடக்க வேண்டிய கட்டாயத்துக்கு உள்ளானார்கள். இரவில்தான் ஓய்வெடுத்தார்கள். ஒரு குன்றைச் சுற்றி அவர்கள் தண்டு இறங்கினார்கள். ஈச்ச மரங்கள் கரிய நிழல் பரப்பின அங்கு. இம்மரங்களின் அடியில் அவர்கள் ஏற்கனவே உணவுப் பொருட்களை ஒளித்து வைத்திருந்தனர். தங்கள் கைதி பாலைவனத்தில் தப்பி ஓடத் துணிவான் என்று சற்றும் எதிர்பாராத அவர்கள் அவன் கைகளைக் கயிற்றால் கட்டுவதுடன் திருப்தி அடைந்தார்கள். பேரீச்சம் பழங்கள் சில உண்டுவிட்டுக் குதிரைகளுக்குத் தீனி போட்டுவிட்டுத் தூக்கத்தில் ஆழ்ந்தார்கள். ப்ரோவன்ஸால் வீரன் தன் எதிரிகள் தன்னைக் கவனிக்கவில்லை என்று கண்டதும் அதிகாலை நேரத்தில் தன் பற்களின் உதவியால் ஒரு *ஸிமிட்டாரைத் திருடிக் கொண்டான். தன் முழங்கால்களுக்கிடையில் அக்கத்தியைப் பொருத்திக்கொண்டு தன் கைகளைப் பயன்படுத்த முடியாமல் தடுத்த கயிறுகளை அறுத்தான். ஒரு கணத்தில் அவன் சுதந்திர புருஷனானான். உடனடியாக ஒரு பிச்சுவாக் கத்தியையும் ஒரு துப்பாக்கியையும் கைப்பற்றினான். பிறகு முன் யோசனையுடன் ஒரு பை நிறைய காய்ந்த பேரீச்சை, ஓட்ஸ் ஆகியவைகளையும் துப்பாக்கித் தோட்டாக்கள், வெடி மருந்து ஆகியவையும் எடுத்துக்கொண்டான். ஒரு ஸிமிட்டாரை இடையில் கட்டித் தொங்க விட்டுக் கொண்டு ஒரு குதிரை மீது பாய்ந்து ஏறினான். பிரெஞ்சுப் பட்டாளத்தை எந்தத் திக்கில் கண்டுபிடிக்கலாம் என்று அவன் எண்ணினானோ அந்தத் திக்கு நோக்கிக் குதிரையைத் தன் கால்களில் பொருத்தப்பட்டிருந்த முள் சக்கரங்களால் உக்கிரமாகக் குத்தி வேகமாகச் செலுத்தினான். திறந்த வெளியில் தாற்காலிகமாகத் தண்டு இறங்கி யிருக்கும் பிரெஞ்சு வீரர்களைப் பார்க்க வேண்டும் என்று பொறுமை இழந்து அவன் துடித்ததன் காரணமாக அவன் ஏற்கனவே களைப்புற்றிருந்த குதிரையை வற்புறுத்தி விரையச் செய்தான். அவன் கால்களில் அணிந்திருந்த முள் சக்கரங்களால் குத்தப்பட்டுக் குத்தப்பட்டு அதன் வயிற்றின் பக்கவாட்டுப் பகுதிகள் இரண்டும் ரத்தக்களறியாகி விட்டன. கடைசியில் அந்தப் பிரெஞ்சுக்காரனைப் பாலைவனத்தில் தன்னந்தனியாக விட்டு விட்டுப் பாவம் அந்த மிருகம் செத்தே விட்டது. தப்பி ஓடிய கைதிக்கு உண்டாகக்கூடிய தைரியத்தையெல்லாம் திரட்டிக் கொண்டு மணலில் சற்று நேரம் நடந்த பிறகு அவன் வேறு வழியின்றி நின்றான். ஏனெனில் அன்றையப் பகல் பொழுது முடிந்து விட்டது. இரவில் கீழ்த்திசை நாடுகளில் வானம் அளிக்கும் அழகிய தோற்றம் இங்கும் அவனை வரவேற்றது என்றாலும் தனக்கு மேலே நடக்கப் போதிய சக்தி இல்லை என உணர்ந்தான். அதிர்ஷ்டவசமாக ஒரு சிறிய குன்றை அவன் கண்டுபிடித்திருந்தான். அதன் உச்சியில் சில ஈச்ச மரங்கள் வானை நோக்கி உயர்ந்தன. அவற்றின் பசுமையான மேல் பகுதிகள்தாம் தொலைவிலிருந்து பார்க்கும்போதே அதன் இதயத்துக்கு நம்பிக்கையையும் ஆறுதலையும் அளித்திருந்தன.

சூரியனுடைய இரக்கமற்ற கிரணங்கள், தங்கள் முழுச் சக்தியுடன் அவன் மேல் பாய்ந்து அவனை எழுப்பின. பொறுக்க முடியாத உஷ்ணம். ஈச்ச மரங்களை எண்ணிப் பார்த்த பிறகு அவன் சுற்றுமுற்றும் நோக்கினான். பயங்கரமான சோர்வு அவன் ஆன்மாவை ஆட்கொண்டது. அவன் முன் எல்லையற்ற ஒரு சமுத்திரம், — கரிய மணல் சமுத்திரம் — கண்ணுக்கெட்டிய தூரமும் அதற்கு அப்பாலும் நாலு திசைகளிலும் பரவிக் கிடந்தது. எஃகின் மீது பிரகாசமான ஒளி பட்டுப் பளபளப்பதுபோல் பாலைவனம் ஜொலித்தது. ஒரு சமயம் நிலைக்கண்ணாடி சமுத்திரமாக அது தோற்றமளித்தது. இன்னொரு சமயம் அரக்கை நிலைக்கண்ணாடித் தாம்பாளத்தில் வைத்து உருக்கியது போல் காட்சி தந்தது. நிரந்தரமான ஒரு சுழல் காற்றானது துடிக்கும் பூமியிலிருந்து எழுப்பிய மணல் ஸ்தம்பங்கள் தகிக்கும் ஆவி போன்று கிளம்பின. வானம், கீழ்த்திசை நாடுகளுக்கே உரிய ஜாஜ்வல்யத்துடனும், தாங்க முடியாத தூய்மையுடனும் கற்பனை எதற்கும் ஆசைப்பட இடம் தராத வகையிலும் ஒளிர்ந்தது. வானமும் பூமியும் தீப்பிடித்து எரிந்து கொண்டிருந்தன.

கட்டுக்கடங்காமலும் அச்சுறுத்தும் கம்பீரத்துடனும் நிலவிய நிசப்தம் பயபக்தியை ஏற்படுத்தியது. எல்லையற்ற தன்மை, அளவிடற்கரிய தன்மை ஆகியவை ஆன்மாவை எல்லாப் பக்கங்களிலிருந்தும் நெருக்கின. வானில் ஒரு மேகமில்லை; காற்றில் ஒரு மூச்சு இல்லை; சின்னஞ் சிறு அலைகளாகச் சதா நகர்ந்து கொண்டே யிருந்த மணற் பரப்பின் நெஞ்சத்தில் ஒரு சிறு குற்றம் குறை இல்லை. நிர்மலமான தினத்தன்று கடலில் முடிவடையும் தொடுவானம் போலத்தான் இங்கும் தொடுவானம் ஓர் ஒளிக் கோட்டுடன் முடிவுற்றது. வாளினால் ஏற்படுத்தப்பட்ட நிச்சயமான ஒரு பிளவு போன்ற ஒளிக் கோடு.

ப்ரோவன்ஸ் மாநில வீரன் தனது கரங்களை ஓர் ஈச்ச மரத்தைச் சுற்றி வீசி அணைத்தான், அது தன் நண்பன் ஒருவனின் உடல் என்று எண்ணியவன் போல. பாறையின்மீது அந்த ஈச்ச மரம் பரப்பிய மெல்லிய நேர்கோடான நிழலில் இருந்து கொண்டு அவன் அழுதான். பிறகு உட்கார்ந்து தணிக்க முடியாத உக்கிரத்துடன் விளங்கிய காட்சியை அபரிமிதமான துக்கத்துடன் பார்த்தான். அவன் பார்ப்பதற்கு அந்தக் காட்சி ஒன்றுதான் இருந்தது. தனிமையை அளந்து பார்க்க எண்ணியவனாக அவன் உரக்கவே அழுதான். குன்றின் குகைகளில் அமிழ்ந்துபோன அவன் குரல் இலேசாகத்தான் கேட்டது; எதிரொலி எழும்பவில்லை. எதிரொலி அவன் இதயத்திலிருந்து கிளம்பியது. ப்ரோவன்ஸால் வீரனுக்கு

---

* ஸிமிட்டார்: அடி சிறுத்தும், நுனி பருத்தும், வளைந்தும், ஒரு பக்கம் மட்டுமே கூரிய முனையுடையதுமான கத்தி.

வயது இருபத்திரண்டு. அவன் தன்னிடமிருந்த துப்பாக்கியில் தோட்டாவும் வெடி மருந்தும் வைத்தான்.

''என்ன அவசரம்?'' என்று தனக்குத் தானே கூறிக்கொண்டு தனக்கு விமோசனம் அளிக்கக்கூடிய ஒரே பொருளான ஆயுதத்தைத் தரையில் வைத்தான்.

கரிய நிலப்பரப்பையும், நீல வானவெளியையும் மாறி மாறிப் பார்த்த அந்தச் சிப்பாய் பிரான்ஸைப் பற்றிக் கனவு கண்டான். பாரீஸ் நகரச் சாக்கடைகளை மகிழ்ச்சியோடு முகர்ந்தான். தான் கடந்து வந்த நகரங்கள், சக வீரர்களின் முகங்கள், தனது வாழ்க்கையில் நடந்த சின்னச் சின்னச் சம்பவங்கள் எல்லாம் ஞாபகத்துக்கு வந்தன. துணி விரித்தாற்போல் கிடந்த பாலைவனத்தின் மீது உஷ்ணமானது அலையாகப் படர்ந்தது. அந்தக் கானல் நீரில் அவன் தான் மிகவும் நேசித்த ப்ரோவன்ஸ் மாநிலத்தைக் கண்டான். கொடுமையான இந்த மாயத் தோற்றத்துக்குப் பயந்து அவன் தான் ஏறி வந்த பக்கத்துக்கு எதிர்ப் பக்கத்தில் இறங்கினான். ஒருவன் அடைக்கலம் பெறக் கூடிய அந்த இடத்தில் முன்பொரு முறை யாரோ வசித்திருக்கிறார்கள் என்பதை அங்கு கிடந்த ஒரு கந்தல் கம்பளி உணர்த்தியது. சற்றுத் தூரத்தில் சில மரங்கள் ஏராளமான பேரீச்சம் பழங்களுடன் காணப்பட்டன. இவற்றைப் பார்த்ததும் மனிதனை வாழ்வோடு இணைக்கும் உணர்வு அவன் இதயத்திலும் விழித்தெழுந்தது. அந்தப் பக்கமாக அராபியர்கள் யாராவது செல்லும்வரையில் உயிர் வாழ்ந்து காத்திருக்க முடியும் என்று நம்பினான். ஒருவேளை அவன் பீரங்கிச் சத்தத்தைக் கேட்கவும் நேரலாம். நெப்போலியன் எகிப்தை இப்போது கடந்து கொண்டிருக்கிறாரே!

நடு இரவில் ஒரு விநோதமான சத்தத்தால் அவன் தூக்கம் கலைந்தது. அவன் எழுந்து உட்கார்ந்தான். அவனைச் சுற்றியிருந்த ஆழ்ந்த நிசப்தம் காரணமாய் மூச்சை மாற்றி மாற்றி இழுத்து விடும் ஓசையை அவனால் தெளிவாகக் கேட்க முடிந்தது. அதன் காட்டுமிராண்டித்தனமான சக்தி, அது ஒரு மனிதன் விடும் மூச்சல்ல என்பதை உணர்த்தியது.

அவனுக்கு இருந்த அதிகமான பீதி, இருள் நிசப்தம் ஆகியவற்றால் மேலும் அதிகரித்தது. அவன் மனத்தில் தோன்றிய நிழலுருவங்கள் அவனுள்ளே இதயத்தை உறைந்துபோகச் செய்தன. ரோமங்கள் குத்திட்டு நிற்பதை உணர்ந்தான். சிரமப்பட்டு உற்றுப் பார்த்த போது நிழல்களின் ஊடே இரு மஞ்சளான ஒளிச் சுடர்களைக் கண்டான். தன் கண்களின் பிரதிபலிப்பே இவை என்று முதலில் நினைத்தான். ஆயின் சீக்கிரமே இரவின் பளபளப்பு, தன்னைச் சுற்றிக் குகையில் உள்ள பொருள்களைப் படிப்படியாக இனம் கண்டுகொள்ள அவனுக்கு உதவியது. தன்னிடமிருந்து இரண்டடி தூரத்தில் ஒரு பெரிய மிருகம் படுத்திருப்பதைப் பார்த்தான். அது ஒரு சிங்கமா, புலியா, அல்லது முதலையா? இலேசாக அசைவதற்குக்கூட அவன் துணியவில்லை. நரியிடம் உள்ளது போன்று மூக்கைத் துளைக்கும் ஒரு நெடி — ஆனால் அதைவிட இது இன்னும்



''பக்கத்து வீட்டு எம்.எல்.ஏ. பையனும் எதிர் வீட்டு மாஜி மந்திரி பையனும் ஒருவருக்கொருவர்...''

''என்ன! கல்லால் அடித்துக் கொள்கிறார்களா?''

''இல்லே! நம்ம தோட்டத்து எலுமிச்சம் பழங்களால் அடித்துக் கொள்கிறார்கள்!''

தீவிரமாக இருந்தது — குகையை நிரப்பியது. இதை உணர்ந்ததும் அந்தப் பிரெஞ்சுக்காரனின் பீதி உச்ச கட்டத்தை அடைந்தது. தனக்கு மிக அருகில் ஒரு பயங்கர மிருகம் படுத்திருக்கிறது என்பதில் இனி சந்தேகத்துக்கே இடமில்லை. அதனுடைய அரண்மனையைத்தான் அவன் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தான்.

தொடு வானத்தில் இறங்கிக் கொண்டிருந்த சந்திரனின் பிரதிபலிப்பு குகைக்கு ஒளி அளித்து ஒரு சிறுத்தைப் புலியின் புள்ளி போட்ட புறத் தோலைப் பளபளக்கச் செய்ததுடன் அதைப் பார்க்கவும் படிப்படியாக வசதி செய்தது.

எகிப்திய சிங்கம் தூங்கியது. ஓர் ஓட்டல் வாசலில் தாராளமான ஒரு முடுக்கை அமைதியாக ஆக்கிரமித்துக் கொண்டு சுருண்டு படுத்துறங்கும் ஒரு பெரிய நாய் போல. அதன் கண்கள் ஒரு விநாடி திறந்து மூடின. மனிதனை நோக்கி அதன் முகம் திரும்பியிருந்தது. ஓராயிரம் குழப்பமான எண்ணங்கள் அந்தப் பிரெஞ்சுக்காரனின் மனத்தில் தோன்றி மறைந்தன. முதலில் தன் துப்பாக்கியிலிருந்து ஒரு தோட்டாவைச் செலுத்தி அதைக் கொன்றுவிட நினைத்தான். பிறகுதான் சரியாகக் குறி பார்ப்பதற்குத் தேவையான அளவு இடைவெளி தங்களுக்கிடையில் இல்லை என்று கண்டான். குறி தப்பிவிடும். அப்போது அது விழித்துக் கொண்டால்! — இந்த எண்ணம் அவன் கைகால்களை மரத்துப் போகச் செய்தது. நிசப்தத்துக்கு மத்தியில் தன் இதயம் பெரிதாக அடித்துக் கொள்வதை அவன் கேட்டான். அதுவே தான் யோசிப்பதற்கு அவகாசம் அளித்த அதன் தூக்கத்தைக் கலைத்து விடுமோ என்று பயந்தான்.

எதிரியின் தலையைத் துண்டித்து விடும் நோக்கத்துடன் ஸிமிட்டார் மீது இரு முறை தன் கரத்தை வைத்தான். ஆனால் கழுத்தில் விறைப்பாகவும், குட்டையாகவும் இருந்த கேசத்தை வெட்டுவதில் உள்ள சிரமம் இத்திட்டத்தை அவன் கைவிடும்படி செய்தது. சற்றுப் பிசகினாலும் தான் இறப்பது உறுதி

என நினைத்தான். அதைவிட நியாயமான யுத்தத்தில் தன் அதிர்ஷ்டத்தைச் சோதிப்பது நலம். ஆகவே அவன் விடியும்வரையில் காத்திருக்கத் தீர்மானித்தான். காலைப் பொழுது அவனை நீண்ட நேரம் காத்திருக்க அனுமதிக்கவில்லை.

இப்போது அவனால் சிறுத்தையைச் சாவகாசமாக, ஆராய முடிந்தது. அதன் வாய், மூக்கிலெல்லாம் ரத்தம் பூசிக் கிடந்தது. நல்ல விருந்து உண்டுவிட்டுத்தான் வந்திருக்கிறாள் என்று நினைத்தான். நரபலி கொண்டு விட்டுத்தான் வந்திருப்பாளா என்பது பற்றி அவன் யோசித்துச் சிரமப்படவில்லை. அவள் எழுந்திருக்கும்போது பசியுடன் இருக்க மாட்டாள்.

பெண்பால்தான். வயிற்றிலும் அதையொட்டிய பக்கவாட்டுப் பகுதியிலும் அதன் உரோமம் வெளேறென்று பளபளத்தது. வெல்வெட் போன்ற பல சிறிய புள்ளிகள் அவள் கால்களில் கொலுசு அணிந்தாற்போல் தோன்றின. ஒய்யாரமாக வளைந்த வாலும் வெண்மையாக நீண்டு கறுப்பு வளையங்களில் முடிந்தது. அவள் ஆடையின் மேல் பகுதி பளபளப்பு ஏற்றப்படாத தங்கம்போல் மஞ்சளாகவும் மிருதுவாகவும், உயிர்த் துடிப்புடனும் காணப்பட்டது. அதில், இதே ஜாதியைச் சேர்ந்த மற்ற மிருகங்களிலிருந்து சிறுத்தையைப் பிரித்துக் காட்டும் ரோஜா வடிவ, கரிய திட்டுக்கள் இருந்தன.

அந்தக் குகையின் எஜமானியை எதிர்த்தால் எளிதில் வெற்றி காண முடியாது; ஆனால் அமைதியானவள். •திண்டின் மீது படுத்திருக்கும் ஒரு பூனை போன்று அத்தனை எழிலைக் காட்டியபடி அவள் குறட்டை விட்டாள். ரத்தக் கறை படிந்த அவள் பாதங்கள் அவள் முகத்துக்குத் தலையணையாக அமைந்து அவள் முன்பாக நீண்டு கிடந்தன. முகத்திலிருந்து வெள்ளி நூல் இழைகள் போன்று மீசை மெல்லிய நேர்க் கோடுகளாக, ஒளிக்கிரணங்களாக நீண்டன.

சிறுத்தை அங்கிருந்ததானது, — அது தூங்கிக்கொண்டிருந்த போதிலும்கூட — சர்ப்பத்தின் காந்தக் கண்கள் குயிலின் மீது ஆதிக்கம் செலுத்துவது போன்ற அதே நிலைமையை ஏற்படுத்தியது.

இந்த அபாயத்தின் எதிரே ஒரு கணம் அந்தச் சிப்பாயின் வீரம் தோல்வி அடைந்தது. இதே வீரம் குண்டும் வெடிமருந்தும் தாங்கி வெடிக்கத் தயாரா யிருக்கும் பீரங்கி எதிரே பொங்கி எழுந்திருந்திருக்கும். இவ்வாறிருப்பினும் ஒரு துணிச்சலான எண்ணம் இருளடைந்த அவன் ஆத்மாவுக்கு ஒளியைத் தந்ததுடன், புருவங்களில் குளிர்ந்த வியர்வை துளிக்கும் துவாரங்களை அடைத்தது.

''முந்தாநாளே அராபியர்கள் என்னைக் கொன்று போட்டிருக்கலாம்தானே?'' என்று அவன் சொல்லிக் கொண்டான். தான் ஏற்கனவே இறந்து போனதற்குச் சமானம்தான் என்று கருதினான். ஆகவே அவன் தைரியமாகவும், கிளர்ந்தெழுந்த ஓர் ஆவல் குறுகுறுப்புடனும் தன் எதிரி விழித்தெழக் காத்திருந்தான்.

சூரியன் உதயமானதும் சிறுத்தையானவள் திடுமெனக் கண் விழித்தாள். தன் முன்னங் கால்களைச் சக்தியுடன் நீட்டிச் சோம்பல் முறித்தாள். கடைசியில் ஒரு கொட்டாவி விட்டுக் கூரிய நுனி யுடைய சொரசொரப்பான நாக்கையும் எளிதில் வெற்றி கொள்ள முடியாத ஆயுதமான தன் பல் வரிசையையும் காட்டினாள்.

''பகட்டான பேர்வழிதான்'' என்று நினைத்தான் பிரெஞ்சுக்காரன், அவள் மிருதுவாகவும் கொஞ்சலாகவும் உருண்டு புரள்வதைப் பார்த்து. தன் வாயிலும் பாதங்களிலும் இருந்த ரத்தக் கறைகளை அவள் நக்கி நீக்கினாள். தனது முன்னங் காலைத் திரும்பத் திரும்ப ஒரே மாதிரியாகவும் அழகாகவும் பயன்படுத்தித் தன் தலையைச் சொறிந்து கொண்டாள். ''சரி சரி, அலங்காரமெல்லாம் நடக்கட்டும்; சீக்கிரமே ஒருவருக்கொருவர் 'குட்மார்னிங்' சொல்லிக் கொள்ளலாம்'' என்று பிரெஞ்சுக்காரன் தன் வீரத்தையும் குஷாலான மனோபாவத்தையும் திரும்பப் பெறத் தொடங்கியவனாகத் தனக்குத் தானே கூறிக் கொண்டான். அதே சமயத்தில் அராபியர்களிடமிருந்து தான் எடுத்து வந்திருந்த பிச்சுவாக் கத்தியைக் கெட்டியாகப் பற்றினான். அதே கணத்தில் சிறுத்தைப் புலியானவள் தன் தலையை மனிதன் பக்கமாகத் திருப்பி ஆடாமல், அசையாமல் அவனை ஊடுருவிப் பார்த்தாள்.

அவள் அவனை நோக்கி நடந்து வந்தபோது அவளுடைய உலோகக் கண்களின் கடினமும் தாங்க முடியாத பளபளப்பும் அவனை நடுநடுங்க வைத்தன. ஆயினும் அவன் அவளைக் கொஞ்சுவது போலப் பார்த்தான். அவள் கண்களை உற்று நோக்கினான், காந்தம் போல் அவளை ஈர்த்துத் தன் வயப்படுத்துவதற்காக. அவளைத் தனக்கு மிக அருகில் வர அனுமதித்தான். பிறகு மிக மிருதுவாகவும் காதல் விளையாட்டில் ஈடுபட்டது போலவும் தன் கரத்தைத் தலை முதல் வால் வரையில் அவள் உடல் முழுவதும் ஓட விட்டான். பெண் இனத்திலேயே மிக அழகான ஒருத்தியைக் கொஞ்சுவது போல் அவன் நடந்து கொண்டான். மஞ்சள் நிற முதுகை இரண்டாகப் பிரிப்பதும், வளைந்து கொடுக்கும் இயல்புடையதுமான முதுகெலும்புப் பகுதியைச் சொறிந்து கொடுத்தான். மிருகமானவள் தன் வாலை ஆசை மதர்ப்பு மிக ஆட்டினாள். அவள் கண்கள் சாந்தமடைந்தன. பிரெஞ்சுக்காரன் மூன்றாவது முறையாக, அவள் அழகை ஸ்தோத்திரம் செய்வது போன்ற இந்தச் சுவாரசியமான காரியத்தில் ஈடுபட்டபோது பூனையொன்று தன் மகிழ்ச்சியை வெளிப்படுத்தக் கர்ர்ரென்று சப்திப்பது போன்று இவளும் சப்தித்தாள். ஆனால் இந்தச் சத்தம் சக்தி வாய்ந்ததும் ஆழமானதுமான ஒரு தொண்டையிலிருந்து வெளி வந்ததால் அது குகையை எதிரொலிகளால் நிரப்பியது. மாதா கோயில் ஆர்கன் வாத்தியத்தின் கடைசி ஒலி அலைகளைப் போல அது கேட்டது. இவ்வாறு தான் கொஞ்சுவதன் முக்கியத்துவத்தை உணர்ந்த அம்மனிதன் அதை இரு மடங்காக்கிக் கம்பீரமான தன் ஆசை நாயகியை ஆச்சரியத்தில் ஆழ்த்திச் செயலிழக்க வைத்தான். நிலையற்ற போக்குடைய தன் தோழியின் அரக்கத் தன்மையை

அடக்கியாகிவிட்டது என்பது நிச்சயமானதும் அவன் எழுந்தான். அவனுடைய நல்லதிர்ஷ்டம் முதல் நாளே அவள் பசி நன்கு ஆற்றப் பட்டிருந்தது. பெண் புலியானவள் அவனைப் போக அனுமதித்தாள். ஆனால் அவன் குன்றின் உச்சியை அடைந்ததும் அவள் ஒரு சிட்டுக் குருவி மெல்லிய கிளைகளில் ஒன்றிலிருந்து ஒன்றுக்குத் தாவுவது போல் இலேசாகப் பாய்ந்து ஓடி வந்தாள். பூனை இனத்தைச் சேர்ந்த எல்லா விலங்குகளையும் போல் தன் பின்புறத்தை உயர்த்தியபடி அவன் கால்களில் தன் மேனியை உரசினாள். பளபளப்பு அடங்கிய கண்களால் அவள் தன் விருந்தாளியைப் பார்த்தாள். ரம்பம் அறுக்கும்போது ஏற்படும் ஓசை போன்று காட்டுக் குரல் எழுப்பினாள்.

''அடேயப்பா! ரொம்பத்தான் வேலை வாங்குகிறாள்'' என்று பிரெஞ்சுக்காரன் புன்னகையுடன் கூறிக்கொண்டான். இப்போது அவன் காதுகளையும் வயிற்றையும் தொட்டு விளையாடும் துணிவு பெற்றிருந்தான். அவள் தலையைத் தன் பிச்சுவாக் கத்தியால் சொறிந்தான். சரியான ஒரு விநாடியில் அவளைக் கொன்றுவிடலாம் என்றும் பார்த்தான். ஆனால் அவள் எலும்புகள் எவ்வளவு கெட்டியானவை என்று எண்ணியபோது அம் முயற்சியில் நாம் வெற்றி பெறுவோமோ மாட்டோமோ என்ற நினைப்பு வந்து அவனை நடுநடுங்க வைத்தது.

பாலைவனத்தின் அரசி தன் நன்றியை வெளிப்படுத்தினாள். தலையை உயர்த்திக் கழுத்தை நீட்டித் தன் மகிழ்ச்சியை அமைதி காத்ததன் மூலம் வெளிப்படுத்தினாள். அப்போது திடீரென்று அந்தச் சிப்பாய்க்கு இந்தக் காட்டு ராணியைக் கொல்வதென்றால் ஒரே வீச்சில் கத்தியை இவள் கழுத்தில் செருகுவது ஒன்றுதான் வழி என்று தோன்றியது.

அவன் கத்தியை உயர்த்தினான். அதே சமயம் மிகவும் திருப்தியுடன் சிறுத்தையானவள் அவன் காலடியில் பணிந்து கிடந்தாள். அவனை நோக்கி அவள் வீசிய கடைக்கண் பார்வைகளில் இயற்கையான கொடுமையுடன் குழப்பம் விளைவிக்கும் வகையில் நல்லெண்ணமும் கலந்திருந்தது. பாவம், அந்த ப்ரொவன்ஸால் வீரன் ஒரு மரத்தின் மேல் சாய்ந்தபடி பேரீச்சம் பழங்களை உண்டான். தனக்கு விடுதலை அளிக்க யாராவது வருவார்களா என்று பாலைவனத்தையும் உண்மையாகவே தன்னை மன்னித்து விட்டாளா என்று அறியப் பயங்கரமான தன் தோழியையும் அவன் மாறி மாறிப் பார்த்தான்.

பேரீச்சம் பழக் கொட்டைகள் விழுந்த இடத்தை அவள் பார்த்தாள். அவன் கொட்டையை வீசிய ஒவ்வொரு முறையும் அவளுடைய சந்தேகக் கண்கள் அவன்மீது நம்பிக்கையற்ற பார்வையைச் செலுத்தின.

ஏகாந்த ராணியின் முகம் குடி போதையில் இருக்கும் மன்னன் நீரோவின் மகிழ்ச்சியைப் புலப்படுத்துவதாக இருந்தது. அவள் ரத்தம் மாந்தித் திருப்தி அடைந்திருந்தாள்; விளையாட விரும்பினாள்.

சுற்றுமுற்றும் பார்த்தபோது குகையின் அருகில் தன் குதிரையின் சில பகுதிகள்




கிடப்பதைக் கண்டான். சிறுத்தையால் அந்தச் சடலம் இத்தனை தூரம் இழுத்து வரப்பட்டிருந்தது. அதில் மூன்றில் இரண்டு பகுதி ஏற்கனவே உணவாகி விட்டிருந்தது. இந்தக் காட்சி அவனுக்கு நிம்மதி அளித்தது.

சிறுத்தை நீண்ட நேரம் கழித்து வந்ததற்கும், அவன் தூங்கியபோது அவள் அவனிடம் காட்டிய மரியாதைக்கும் இப்போது காரணம் சுலபமாகப் புரிந்தது. ஆரம்பத்தில் ஏற்பட்ட நல்லதிர்ஷ்டம் இனியும் ஏன் நீடிக்கக் கூடாது என்று அவன் எண்ணலானான்.

அவன் அவளிடம் திரும்பினான். அவன் அருகில் நெருங்கியதும் அவள் இலேசாக வாலை ஆட்டியது அவனுக்குச் சொல்லி முடியாத மகிழ்ச்சியை அளித்தது. பயமின்றி அவள் அருகில் அமர்ந்தான். இருவரும் விளையாட ஆரம்பித்தனர். அவள் பாதங்களையும் வாய், மூக்கு முதலானவற்றையும் பற்றினான். காதுகளைப் பிடித்து இழுத்தான். மல்லாக்கப் படுக்குமாறு அவளை உருட்டினான். வயிற்றின் இருபுறமும் இதமான சூட்டுடன் கூடிய மென்மையான பக்கவாட்டுப் பகுதிகளைத் தட்டிக் கொடுத்தான். அவன் என்ன வேணுமானாலும் செய்ய அவள் அனுமதித்தாள். பாதத்தில் இருந்த முடியை அவன் தட்டியபோது முன் ஜாக்கிரதையாக நகங்களை உள்ளுக்கு இழுத்துக் கொண்டாள்.

தன் கத்தியை ஒரு கையில் வைத்துக் கொண்டு, ரொம்பவும் தன்னிடம் நம்பிக்கை வைத்துள்ள சிறுத்தையின் வயிற்றில் ஆழப் பதியுமாறு அதனைச் செலுத்த எண்ணினான் மனிதன். ஆனால் அவனுக்குப் பயமாகவும் இருந்தது. அவள் உடனடியாக மரணப் பிடியில் தன்னைச் சிக்க வைத்து விடலாம். வளைந்து நெளிந்து அவள் உயிருக்குப் போராடு கையில் மூச்சு முட்டித் தான் இறந்து போக





OBM/0172-TM




# சுவைமிக்க இனிப்புகள் தயாரிக்க 6 எளிய நிலைகள்:

ஒவ்வொரு பெட்டியிலும் இனிமையான 5 நறுமணச் சுவைகள்.

பலவகையான ஹல்வாக்கள், இலகுவான புட்டிங்குகள், பழத் தின்பண்டங்கள் முதலிய-வற்றைத் தயாரிக்க உதவுகிறது பிரவுன் & போல்ஸன் ஃப்ளேவர்டு கார்ன் ஃப்ளவர். தவிர இது இளம் குழந்தைகளுக்கும் நோயாளிகளுக்கும் போஷாக்கு அளிக்கும் ஆரோக்கிய உணவாகும். அருமையான உணவுகளிலிருந்து தயாரிக்கப்பட்டு, மிகுந்த கவனத்துடன் பக்குவப்படுத்தப்பட்டதால், மணம் ஊட்டப்பட்ட கார்ன் ஃப்ளவர்களி லேயே மிகச் சிறந்தது பிரவுன் & போல்ஸன்.

**உங்கள் சமையல் உன்னதமாய் இருக்க உயர்ந்த சாமானையே உபயோகியுங்கள்.**

- பிரவுன் & போல்ஸன் ஃப்ளேவர்டு கார்ன் ஃப்ளவர் ஒரு பாக்கெட் முழுவதையும் சுமார் 4 டெஸ்ஸர்ட் ஸ்பூன் (தலைதட்டிய) அளவு சர்க்கரையுடன் கலக்கவும்.
- அத்துடன் சிறிது குளிர்ந்த பால் சேர்த்து, விழுதுபோல் ஆக்கவும்.
- பிறகு அரை லிட்டர் பாலை சூடாக்கவும்.
- சூடாக இருக்கும் போது அடுப்பிலிருந்து இறக்கி, அத்துடன் ஃப்ளேவர்டு கார்ன் ஃப்ளவர் கலவையைச் சேர்த்து நன்றாகக் கிளறவும்.
- பாண்டத்தை மீண்டும் அடுப்பில்வைத்து கொதிக்க விடவும். ஒரு நிமிடம் கொதிக்கட்டும். விடாமல் கிளறவும்.
- நெய் தடவிய தட்டில் கலவையைக் கொட்டி, குளிர்ந்த இடத்தில் வைத்துப் படிய விடவும்.

# பிரவுன் & போல்ஸன்

**ஃப்ளேவர்டு கார்ன் ஃப்ளவர்**

இலவசம்! பிரவுன் & போல்ஸன் பக்குவ முறை நூல் நெ. 5. தயவு செய்து இன்றே ஒரு பிரதிக்கு எழுதுக:



பப்ளிஸிடி டிபார்ட்மென்ட்.
**கார்ன் பிராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரை. லிட்.**
ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், எச். ஸோமானி மார்க், பம்பாய்-400001.

நேரலாம். மேலும் தனக்கு ஒரு தீங்கும் இழைக்காத ஒரு ஜீவனிடம் மரியாதை செலுத்துமாறு அவன் நெஞ்சம் இடித்துரைத்தது. எல்லையற்ற பாலைவனத்தில் அவனுக்கு ஒரு சிநேகிதி கிடைத்துவிட்டாள். தன்னை அறியாமலேயே அவன் தன் முதல் காதலைப் பற்றி எண்ணிப் பார்த்தான். அக் காதலிக்கு அவன் 'மிக்னோன்' என்று செல்லப் பெயர் சூட்டியிருந்தான். ஏனெனில் அவள் மிக மோசமான விதத்தில் பொறாமைக்காரியாக இருந்தாள். அவர்கள் காதல் நீடித்த காலமெல்லாம் அவன், அவளிடமிருந்த ஒரு சிறிய கத்திக்குப் பயந்து கொண்டேயிருந்தான். அதைக் காட்டி அவள் சதா அவனை அச்சுறுத்திக் கொண்டிருந்தாள். அத்தனை பொறாமை அவளுக்கு!

இந்த ஆரம்ப கால நினைவுகள் 'மிக்னோன்' என்று சிறுத்தையை அழைத்துப் பழக்க வேண்டும் என்ற எண்ணத்தைத் தோற்றுவித்தன. கடைசியில் கூவுகிற மாதிரியான குரலில், ''மிக்னோன்'' என்று அவன் அழைத்தபோது அவள் அவனை ஏறிட்டு நோக்கப் பழகி விட்டாள்.

இரவு அவள் தூங்கியதும் தன் கால்கள் எவ்வளவு வேகமாக இட்டுச் செல்லுமோ அத்தனை வேகமாக ஓடிவிடுவதென்றும் தங்குவதற்கு வேறு ஒரு புகலிடத்தை நாடுவதென்றும் அவன் தீர்மானித்தான்.

தான் தப்பி ஓட வேண்டிய நேரத்துக்காகப் பொறுமையிழந்து காத்திருந்தான். அந்தச் சமயம் வந்ததும் நைல் நதி இருந்த திக்கு நோக்கி விரைவாக நடந்தான். ஆனால் அவன் மணலில் கால் மைல் தூரம் நடப்பதற்குள்ளாகவே, மிக்னோன் அவனைத் துரத்திக் கொண்டு ரம்பம் அறுப்பது போன்ற குரலொலி எழுப்பியபடி வந்து விட்டாள்!

அதே விநாடியில் அவன் நகர்ந்துகொண்டேயிருக்கும் புதை மணல் குழிகளுள் ஒன்றில் விழுந்துவிட்டான். வழிப்போக்கர்களுக்குப் பயங்கர ஆபத்தாக விளங்கும் இதில் விழுந்த ஒருவன் தன்னைக் காப்பாற்றிக் கொள்வது என்பது சாத்தியமேயில்லை. தான் சிக்கிவிட்டதை உணர்ந்ததும் அவன் பயந்து கூச்சலிட்டான். மிக்னோன் தன் பற்களால் அவன் காலரைப் பற்றிக் கொண்டு பின்னோக்கி விரு விருப்புடன் பாய்ந்தாள். அவனை உள்ளுக்கு இழுத்த மணல் சுழலிலிருந்து ஏதோ மந்திர ஜாலம் செய்தாற்போல் வெளியே இழுத்து விட்டாள்.

''ஆ! மிக்னோன்!'' என்று கூவி அழைத்து, மிகுந்த உற்சாகத்தோடு அவளைத் தட்டிக் கொடுத்துக் கொஞ்சினான் சிப்பாய். ''வாழ்விலும் சரி, மரணத்திலும் சரி நாம் பிரிய முடியாது பிணைக்கப்பட்டிருக்கிறோம்'' என்று கூறி வந்த வழியே திரும்பினான்.

அந்தத் தருணம் முதல் பாலைவனம் வாழக் கூடிய இடமாகி விட்டது. அம்மனிதன் பேசி மகிழ வாய்ப்பளித்த ஒரு ஜீவன் அங்கிருந்தது. அதன் கொடிய இயல்பை அவன் மாற்றி அதனைச் சாதுவாக்கி விட்டிருந்தான். ஆயின் இந்த விநோதமான நட்புறவின் காரணத்தை அவனால் விளங்கிக் கொள்ள முடியவில்லை. தற்காத்துக் கொள்ள விழித்திருக்க வேண்டும் என்று ஆசைப்பட்ட போதிலும் சிப்பாய் உறங்கினான்.

மறு நாள் காலை குன்றின் மீது அவன் ஏறியதும் அவள் சற்றுத் தூரத்தில் தன்னை நோக்கிப் பாய்ந்து வருவதைக் கண்டான். அவள் தாடைகளில் ரத்தக் கறை படிந்திருந்தது. அவனுக்குப் பழக்கமாகிவிட்டிருந்தபடி அவன் தட்டித் தடவிக் கொடுத்தான். அது தனக்கு எத்தனை மகிழ்ச்சி அளித்தது என்பதை அவள் காட்டிக் கொண்டாள்.

''ஆ! குமரியே! நீ ரொம்ப நல்ல பெண் இல்லையா? உன்னைச் சதா முகஸ்துதி செய்வது போல் தட்டித் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தால் உனக்கு ரொம்பப் பிடிக்கும் இல்லையா? உனக்கு வெட்கமாயில்லை? யாரோ ஓர் அராபியனைத் தின்றுவிட்டு வந்திருக்கிறாய் இல்லையா? அது பற்றிப் பரவாயில்லை. அவர்கள் உன்னைப் போலவே மிருகங்கள் தாம். ஆனால் பிரஞ்சுக்காரர்களைத் தின்னும் பழக்கத்துக்கு ஆளாகாதே! அப்புறம் உன்னை எனக்குப் பிடிக்காமல் போய்விடும்!'' அவன் செல்லமாக வீட்டில் வளரும் ஒரு பிராணியிடம் பேசுவது போல் கூறினான்.

இப்படியே சில நாட்கள் கடந்தன. ப்ரொவன்ஸால் வீரன் பாலைவனத்தின் அசாதாரணமான, பயபக்தியை ஊட்டுகிற எழிலையெல்லாம் ரசித்தான். அவ்விடத்தில் ஏதேனும் ஒரு விதத்தில் அன்பு செலுத்த வேண்டியது அவசியமாயிருந்தபடியால் அவன் கடைசியில் அந்தச் சிறுத்தையிடம் அளப்பரிய ஆசை வைத்தான். அவள் வேட்டையாடச் சுற்றுலா கிளம்பியபோதெல்லாம் தாராளமாக அவனுக்கு உணவு கிடைத்ததாலோ, அல்லது அவன் அவள் சுபாவத்தையே தன் உறுதியைச் சக்தி வாய்ந்தவிதத்தில் வெளிப்படுத்தியதன் மூலம் அடியோடு மாற்றிவிட்ட

**''எப்படி மன்றாடிக் கேட்டாலும் உனக்கு இந்த மாதம் புதுப் புடவைகள், நகைகள் எதுவும் வாங்கித் தர முடியாது!''**

- கே. சண்முகம்



னாலோ — எப்படியானாலும் சரி — அவன் அம்மனிதனின் உயிருக்கு மதிப்பளித்தான். அவன் சாதுவாகி விட்டிருப்பதைப் பார்த்து அவனும் தன் உயிருக்குப் பயப்படுவதை விட்டொழித்தான்.

தன் நேரத்தின் பெரும் பகுதியை அவன் தூக்கத்தில் கழித்தான். ஆனால் தனக்கு விடுதலை தரக்கூடிய விநாடியைத் தான் காணாமல் நழுவ விட்டுவிடக் கூடாது என்பதால் தொடுவானம் போட்ட கோட்டின் மீதாக யாராவது நடந்து செல்கிறார்களா என்பதை அவன் வலையில் உள்ள சிலந்தியைப் போல் சதா கண்காணித்தபடி இருக்க வேண்டியிருந்தது.

தன் சட்டையை ஒரு கொடி தயாரிப்பதற்காகத் தியாகம் செய்தான். ஒரு மரத்தின் மீது அதைத் தொங்கவிட்டான். யாராவது வழிப்போக்கர்கள் பாலைவனத்தை ஊடுருவி நோக்கும்போது காற்று வீசாதிருக்கலாம். ஆகவே அவன் சிறிய குச்சிகளைப் பயன்படுத்தி சட்டைத் துணி சதா பிரிந்த நிலையில் இருக்குமாறு கட்டினான்.

ஒரு நாள் சூரியன் பிரகாசமான ஒளி சிந்திய மத்தியான வேளையில் ஒரு மாபெரும் பட்சி ஆகாயத்தில் திசையறிந்து சென்றது. மனிதன் சிறுத்தையை விட்டு விட்டுப் புதிய விருந்தாளியைப் பார்க்க வந்தான். தனியே விடப்பட்ட ராணி ஒரு விநாடி காத்திருந்த பிறகு ஆழ்ந்த குரலில் உறுமினாள். ''சரிதான் இவள் பொறுமைப்பட ஆரம்பித்துவிட்டாள் போலிருக்கிறதே!'' என்று அவன் உரக்கக் கூறிக் கொண்டான். அவள் கண்கள் கடினம் அடைந்திருப்பதைப் பார்த்தான். ''* வர்ஜினியின் ஆன்மா இவளுக்குள் புகுந்து கொண்டிருப்பது நிச்சயம்.''

கழுகு காற்றில் மறைந்து விட்டது. சிப்பாய் சிறுத்தையின் வளைந்த மேனி எழிலை ரசித்தான். ''அடடா! இளமையும் அழகும் இந்த வடிவத்தில் எப்படி இணைந்துள்ளன! ஒரு மங்கையைப் போலவே அவள் அழகாக இருக்கிறாள்!''

மனிதனும் சிறுத்தையும் ஒருவரையொருவர் பொருள் பொதிந்த பார்வையுடன் நோக்கினார்கள். கொஞ்சும் சுபாவமுடைய அவள், நண்பன் தன் தலையைத் தட்டிக் கொடுத்தபோது மேனி சிலிர்த்தான். அவள் கண்கள் மின்னலெனப் பளிச்சிட்டன. பிறகு அவற்றை இறுக மூடிக் கொண்டான். ''இவளுக்கு ஆன்மா இருக்கிறது'' என்றான் அவன், ஆடாது, அசையாது இருந்த மணல் ராணியைப் பார்த்தவாறு. மணலைப் போலவே வெண் நிறமாகவும் மணலைப் போலவே மென்மையாகவும் மணலைப் போலவே தனிமையாகவும் மணலைப் போலவே கனல் பிழம்பாகவும் இருந்தாள் அவள்.

''அது சரி, மிருகங்கள் சார்பில் நீங்கள் வாதாடியதெல்லாம் படித்தேன். ஆனால் ஒருவரை ஒருவர் புரிந்து கொள்வதில் இந்த அளவுக்குப் பழக்கப்பட்டிருந்த அவர்கள் கதை எப்படி முடிந்தது?''

''ஆ! அதுவா? மிதமிஞ்சிய, உணர்ச்சிமயமான அன்பு கடைசியில் எப்படி முடியுமோ அப்படித்தான் இவர்கள் கதையும் முடிந்தது — ஒரு தப்பபிப்பிராயத்தின் விளைவாக. ஏதோ ஒரு காரணத்தால் ஒருவரை ஒருவர் நம்பிக்கைத் துரோகி என்று கருதுகிறார்கள். கர்வம் காரணமாக ஒருவருக்கொருவர் விளக்கம் கூறிக் கொள்ள முன் வருவதில்லை. சண்டை போட்டுப் பிரிகிறார்கள். இதற்குப் பிடிவாதம் ஒன்று மட்டுமே காரணமாகிறது.''

''வாஸ்தவம். சில சமயங்களில், சரியான விநாடியில் உதிர்க்கப்படும் ஒரு வார்த்தை அல்லது வீசப்படும் ஒரு பார்வை போதுமானதாக இருக்கிறது இந்தச் சோக முடிவுக்கு. அது எப்படியோ போகட்டும். உங்கள் கதையைச் சொல்லுங்கள்!''

''அதைச் சொல்வது ரொம்ப சிரமம். என்றாலும் நீ புரிந்து கொள்வாய் என்று நம்புகிறேன். சாம்பெய்னைக் குடித்துவிட்டு அந்தக் கொடியவர் — ஒற்றைக் கால் வீரர் — கூறினார்:

'' 'அவளை நான் துன்புறுத்தியதாக எனக்குத் தோன்றவில்லை. ஆனால் அவள் அபரிமிதமான கோபம் கொண்டவள் போல் கூரிய பற்களால் என் கால்களைப் பற்றினான். மிருதுவாகத்தான் என்று கூற வேண்டும். ஆனால் நான், அவள் என்னை விழுங்கிவிடுவாள் என்று மிரண்டு போய் அவள் கழுத்தில் கத்தியைப் பாய்ச்சி விட்டேன். அவள் புரண்டான். அவள் எழுப்பிய குரலொலி என் இதயத்தை உறையச் செய்தது. கோபமற்ற பார்வையால் என்னை நோக்கியபடியே அவள் சாவதை நான் கண்டேன். அவளை மீண்டும் உயிர்ப்பிக்க என் சொத்து சுதந்திரம் அனைத்தையும் தந்திருப்பேன். உண்மையில் ஒரு மானுடப் பெண்ணைக் கொன்று விட்டது போலவே உணர்ந்தேன். என் கொடியைப் பார்த்து விட்டு என் உதவிக்கு வந்த சிப்பாய்கள் நான் கண்ணீர்விட்டு அழுவதைக் கண்டார்கள்.

'' 'அதன் பிறகு நான் எத்தனையோ போர்க்களங்களை ஜெர்மனி, ஸ்பெய்ன், ருஷ்யா, பிரான்ஸ் ஆகியவற்றில் பார்த்து விட்டேன். இந்த என் சரீரத்தை — மாமிசக் குவியலை — எத்தனையோ இடங்களுக்குத் தூக்கிச் சென்றிருக்கிறேன். ஆனால் பாலைவனத்தைப் போல வேறு ஒன்றை ஒரு போதும் கண்டதில்லை. ஆ! அதுதான் என்ன அழகு. என்ன அழகு!'

'' 'அங்கிருந்த போது உங்களுக்கு என்ன உணர்ச்சி ஏற்பட்டது?' என்று கேட்டேன்.

'' 'ஆ! அதை விவரிக்க முடியாது. இளைஞனே! மேலும் ஈச்ச மரங்களுக்கிடையிலும் சிறுத்தைப் புலியுடனும் வாழ நேர்ந்ததே என்பதற்காக நான் சதா வருத்தப்பட்டுக் கொண்டிருக்கவில்லை. அவை இல்லாதிருந்திருந்தால் ரொம்பத் துயர் அடைந்திருப்பேன். ஏனென்றால் பாலைவனத்தில் எல்லாமும் உண்டு, ஏதொன்றுமில்லை!'

'' 'ஆமாம்.... ஆனால் இதற்கு விளக்கம் சொல்லுங்கள்.....'

''அவர் பொறுமை இழந்ததாக ஜாடை காட்டினார். 'பாலைவனம் மனித குலம் சம்பந்தப்படாத கடவுள்' என்றார்.''

(ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்)

* பொறுமைக்காரியான மிக்னோனின் இயற் பெயரைக் குறிப்பிடுகிறார் கதாசிரியர்.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

இண்டேன் பாதுகாப்புத் தொடர்-2

# ‘தான்தோன்றி’ மேதைகளை கைவைக்க விடாதீர்கள்!

**சொந்தமாகப் பழுதுபார்த்திடும் சூரர்களை நம்பவேண்டாம்! ஸிலிண்டரைக் கோப்பதற்கும், சுழற்றுவதற்கும் தொழில்நுட்ப வல்லுனர்களை நம்புவதே நல்லது. ஸிலிண்டர் வால்வோ, பிரஷ்ஷர் ரெகுலேட்டரோ, பர்னரோ எதைச் சரியமைப்பதானாலும், பழுதுபார்ப்பதானாலும் இதுவே முறை. எப்பொழுதும் சரி, விநியோகஸ்தரை வரவழைக்கவும்!**

உங்கள் வீட்டிலே தீ விபத்து நேருவதைத் தடுக்க வேண்டுமானால், செய்ய வேண்டியவை, செய்யக் கூடாதவை என்னென்ன என்பதற்கான முக்கிய விதிகள் இதோ:

**செய்ய வேண்டியவை** ■ உபயோகத்திலில்லாத போது ஸிலிண்டர் வால்வையும், பானர் குமிழ்களையும் மூடிய நிலையில் வைத்துக்கொள்க. ■ ரீஃபில் ஸிலிண்டரை இணைத்திடும் போது எல்லா நெருப்புக்களும் அணைக்கப்பட வேண்டும். ■ ஸிலிண்டரை இணைத்தான பின், ரெகுலேட்டர் ஜாயிண்டுகளின் இணைப்புறுதியை சோப்பு நீரினால் பரிசோதிக்கவும். ■ ஸிலிண்டர் வால்வுகளைத் திறக்க, கைத்திருகு சக்கரத்தை இடச்சுற்றாக அரைவட்ட அளவுக்கு இலேசான அழுத்தமுடன் திருப்பினால் போதும் ■ மூட்டுவதற்கெனக் குமிழைத் திருப்புமுன்னமே, பற்றவைத்த தீக்குச்சியை பர்னரில் காட்டவும் ■ ரீஃபில் இணைக்கப்படும் ஒவ்வொரு தடவையும் வளைகுழாயின் நிலையைப் பரிசீலித்துத் துப்புரவாக வைத்துக்கொள்க

**கூடாதவை** ■ ஸிலிண்டரை படுக்க வைக்கக்கூடாது. ■ ஸிலிண்டரை நீங்களாகவே சுழற்றவோ, கோக்கவோ கூடாது; வீடு மாற்றும் போதோ, சுழற்றிக் கோக்கும் வேலைகளை உங்கள் விநியோகஸ்தரிடம் விடுங்கள். ■ ஸிலிண்டர் வால்வுகள், பிரஷ்ஷர் ரெகுலேட்டர், பர்னர், எதனையும் நீங்களாகவே சரியமைக்கவே கூடாது. ■ ரெகுலேட்டரிலிருந்தோ, பர்னரிலிருந்தோ வளை குழாயை இழுக்கக் கூடாது. மீறினால் விபத்து நேரிடக் கூடும். ■ சூடேறும் இடத்தின் அருகே வளை குழாயை வைக்கக்கூடாது.

**விதிமுறைக் குறிப்புக் கார்டை உங்கள் விநியோகஸ்தரிடமிருந்து பெற்றுக்கொண்டு, அதிலுள்ள விதிகளைக் கண்டிப்புடன் பின்பற்றவும்.**

**Indane** இண்டேன்—பாதுகாப்பிலே எந்த சமையல் எரிபொருளுக்கும் நிகர்

விற்பனைக்கு விடுப்போர்:

**இண்டியன் ஆயில் கார்ப்பொரேஷன் லிமிடெட்**





Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)